நாணென்பது—வெட்கம், கயிறு. உ.
தோணி—இரேவதிநக்ஷத்திரம்,மரக்கலம்,அம்பு,தெப்பம்,சேறு.ரு.
வாணி—ஒருகூத்து, சொல், சரசுவதி. ௩.
ஏணி—உலகம், எல்லை, ஏணி, மான். ௪.

திணை—நிலம், சாதி, ஒழுக்கம். ௩. செவி—காது, கேள்வி. உ.
பிணை—ஆசை, விலங்கின்பெண். உ. பிலவங்கம்—குரங்கு,தேரை.
கணை—அம்பு, திரட்சி. உ. கட்சி—காடு, பறவைக்கூடு. உ.
பணை—வயல்,குதிரைப்பந்தி,பருமை,மூங்கில்,அரசமரம்,பெருமை.

யாணர்—புதுமை, தச்சர், அழகு, நன்மை. ௪.
பாணம்—மழைவண்ணக்குறிஞ்சி, அம்பு, பட்டுவஸ்திரம். ௩.
சேண்—அகலம், நீளம், உயரம். ௩.
ஆணை—உண்மை, வெற்றி, சபதம், ஏவல். ௪.

அண்டம்—ஆகாயம், முட்டை. உ. அயில்—வேலாயுதம், கூர்மை.
துண்டம்—சாரைப்பாம்பு, துணி, முகம், மூக்கு. ௪.
கண்டம்—கவசம்,வெல்லம்,கழுத்து,இடுதிரை,வாள்,துண்டம். ௬.
முண்டகம்—தாழை, கள், தாமரை, நெற்றி, முள்ளுடைமூலம். ரு.

அண்டர்—பகைவர், தேவர், இடையர். ௩. சண்டன்—சதயநக்ஷத்திரம், மூஞ்சூறு. உ. கண்டல்—தாழை, முள்ளிச்செடி. உ.
கரைதல்-அழைத்தல், ஒலித்தல். உ. பண்டம்-பொன்,பலபண்டம்.
பாகு—பங்கு, குழம்பு, பாக்கு. ௩.

விண்டு—விட்டுணு, மலை, மேகம், மூங்கில், காற்று. ரு.
தொண்டு—பழமை, ஒன்பது, அடிமை, வழிபாடு. ௪.
தண்டு—குழாய், வீணை, தடி, சேனை, மிதுனராசி, ஓந்தி. ௬.
வண்டு—சங்கு, குற்றம், கைவளை, வண்டு, அம்பு. ரு.

உண்டை—திரட்சி, படைவகுப்பு. உ.
தொண்டை—ஆதொண்டைச்செடி, கொவ்வை, யானைத்துதிக்கை. ௩.
கொண்டை—மயிர்முடி, * இலந்தைக்கனி. உ.
கண்டிகை—பதக்கம், வாகுவலயம், ஆபரணச்செப்பு. உ.

தண்ணம்—ஒருகட்பறை, மழு. உ.
வண்ணம்—அழகு, நிறம், குணம். ௩. மறை—இரகசியம், வேதம்.
பண்—இசைப்பாட்டு, பண், குதிரைக்கலணை. ௩.
மண்—அணு, ஒப்பனை, மார்ச்சனை. ௩.

* கோண்டை - இலந்தைக்கனி.

அணங்குநோயழகுதெய்வமாசைபெண்கொலைவருத்தம்
துணங்கையேவிழாப்பேய்கூத்தாமாதிரைநாளுஞ்சொல்லும்
குணுங்கர்தோற்கருவிமாக்கள்குயிலுவரிழிஞர்முப்பேர்
துணங்கறலிருள்விழாவாந்தோன்றலேசுதனுதன்பேர். (௧௨)

புணரியேவாரிநீரிற்பொருதிரைகரைமுப்பேராம்
பணிலமேசலஞ்சலஞ்சங்கிருபெயர்பகரலாமே
கணிவேங்கைமரமதாகுங்கழனிசூழ்மருதமும்பேர்
பணியேதோறகருவிவார்த்தைபாம்புசெய்தொழிலுமாமே. (௧௩)

பாணியூர்நீர்கையோசைபற்றுக்கான்போதுநாடு
சேணுறுசோலைபண்டஞ்சிறந்தபல்லியம்பன்னென்றும்
தாணுவேசைலங்குற்றிசங்கரனிலைதூணம்பேர்
வேணியேசடைவிசும்பாம்வியாளமேபுலியும்பாம்பும். (௧௪)

குண்டலங்குழைவிசும்பாங்குபேரனேதனதன்சோமன்
மண்டலம்பரியூர்வட்டமந்தியேயூகம்வண்டு
கொண்டலேமுகில்கீழ்காற்றுங்கோட்டியேவாயில்கூட்டம்
மண்டூலிபூனைபாம்புமண்ணொடுநாயுமாமே. (௧௫)

புண்டரீகநதிக்கானைபுலிவண்டுகழுகுகஞ்சம்
தண்டமேயானைசெல்லும்வழிதண்டாயுதங்குடைக்கால்
பிண்டிநெனமாவசோகாம்பிதாச்சிவனபிரமனுரை
கண்டகஞ்சுரிகைமுள்வாளகளவெனபகளாச்சோரப்போ. (௧௬)

பண்ணவன்முனிவனதேவன்பகர்குருவருகனுற்பேர்
தண்ணடைமருதஞ்சாரூநாடெனவிருபோசாற்றும்
வண்மையேவழங்கலவாய்மைவளம்புகழ்வலியாமென்ப
ஒண்மையேமிகுதிநன்மையொழுங்கறிவழகைப்பேரே. (௧௭)

எண்வலியெள்ளிலக்கமெளிமைசோதிடம்விசாரம
கண்ணிடங்கணுவேய்கண்ணுங்காஞ்சிமேகலையோர்பண்ணும்
விண்முகில்சுவர்க்கம்வானும்விபுலம்பார்விரிவுபீடு
பண்ணையேவயனீர்தாழ்வுமருதமாத்துயிலும்பாழி. (௧௮)

காண்டமேதிரைகாடம்புகமண்டலங்கலன்பெய்செப்பு
நீண்டகோன்முடிவுதூசீர்படைக்கலமீரைந்தாம்
பாண்டிலேறூர்திவட்டம்பணைகட்டில்விளக்குத்தாளம்
ஈண்டென்பதிவ்விடத்தோடிப்படிசடிதியும்பேர். (௧௯)

அணங்கென்பது—நோய், அழகு, தெய்வம், ஆசை, பெண், கொலை, வருத்தம். எ. துணங்கை—திருவிழா, பேய், கூத்து, திருவாதிரைநக்ஷத்திரம். ச. குணுங்கர்—தோற்கருவியாளர், நரப்புக்கருவியாளர்,* சண்டாளர். ௩. துணங்கறல்—இருள், உறக்கம். ௨. தோனறல்—மகன், எப்பொருட்குமிறைவன. ௨.

புணரி-கடல், கடற்றிரை, கரை. ௩. பணிலம்-சலஞ்சலம், சங்கு. ௨.
கணி—வேங்கைமரம், மருதநிலம். ௨.
பணி—தோற்கருவி, சொல், பாம்பு, செய்தொழில். ச.

பாணி—ஊர், நீர், கை, ஓசை, பறறு, காடு, காலம், நாடு, சோலை, பலபண்டம், வாசசியப்பொது. ௧௧.
தாணு—மலை, குறறி, சிவன், நிலை, தூண். ௫.
வேணி—சடை, ஆகாயம. ௨. வியாளம—புலி, பாம்பு. ௨.

குண்டலம்—குண்டலம், ஆகாயம். ௨. குபேரன்-குபேரன், சந்திரன்.
மண்டலம்—குதிரை, ஊர, வட்டம. ௩. மந்தி—பெண்குரங்கு, வண்டு.
கொண்டல்-மேகம், கீழகாறறு. ௨. கோட்டி-கோபுரவாயில, கூட்டம். ௨. மண்டலி—பூனை, பாமபு, பூமி, நாய. ச.

புண்டரீகம—தென்கிழததிசையானை, புலி, வண்டு, கழுகு, தாமரை.
தண்டம—யானைசெல்லுமவழி, தண்டாயுதம, குடைக்காமபு. ௩.
பிண்டி—செனமா *, அசோகமரம. ௨. பிதா—சிவன, பிரமன, பெருநாரை. ௩.
கண்டகம்—உடைவாள், முள, வாள். ௩. களவு-களாச்செடி, திருடடு.

பண்ணவன்-முனிவன், தேவன, குரு, அருகன. ச. தண்ணடை—மருதநிலததூர், நாடு. ௨. வணமை—கொடை, உணமை, வளம், புகழ, வலிமை. ௫. ஒண்மை—மிகுதி, நனமை, ஒழுங்கு, அறிவு, அழகு. ௫.

எண்—வலி, எள், இலக்கம், எளிமை, சோதிடநூல், விசாரம். ௬.
கண்—இடம், மரகணு, மூங்கில்கணு. ச. காஞ்சி-மேகலை, ஒருபண்.
விண்-மேகம், தேவலோகம், ஆகாயம். ௩. விபுலம்-பூமி, விசாலம், பெருமைம. ௩. பண்ணை-வயல், நீர்நிலை, மருதநிலம், விலங்கினபடுக்கை.

காண்டம்—இடுதிரை, காடு, அம்பு, கமண்டலம், பூண்கொள்கலம், கோல், முடிவு, வஸ்திரம், நீர், ஆயுதம். ௧௦. பாண்டில்—எருது, பரிகள்பூண்டேர்க்குமூர்தி, வட்டம், மூங்கில், கட்டில், விளக்கினறகழி, தாளம். எ. ஈண்டு—இவ்விடம, இவ்வண்ணம், [இவ்வுலகம] விரைவு. ௬.

* பிண்டி - மாப்பொதுவின்பெயருமாம்.

அண்டசமுதலையோர்தியரணைபுள்ளுடும்புபல்லி
நண்டுமீன்றவளையாமைநாகமிப்பியுமீராறும்
சண்டன்கூற்றலிவெய்யோனுந்தாள்கதவுறுதாள்பாதம்
சுண்டையேசுண்டைகள்ளாஞ்சொர்க்கமேசுவர்க்கங்கொங்கை. ()

பணமென்பதரவின்பையும்பாம்பும்பொற்காசுமுப்பேர்
மணமென்பவாசங்கூட்டம்வதுவையுமாகுமென்ப
பணவையேபரணும்பேயும்பையுளேசிறுமைநோயாம்
நுணவையெண்ணொலைபிண்டிநுனியென்பநுதிநுண்மைப்பேர். ()

ணகரவெதுகை முற்றிற்று.

ஆ. விருத்தம் - கூச.

# தகரவெதுகை.

மதலையேகொன்றைபிள்ளைமரக்கலங்கொடுங்கைதூணும்
சிதலைநோய்துணிசெல்லென்பசிதநீர்குளிரேமேகம்
பதலையோர்கட்பறைப்பேர்பருவரைதாழிக்கும்போ
கதலியேவாழைதேறறுக்காறருடிதுவசநாற்பேர். (க)

இதழ்பனையேடுபூவினிதழுதடெனவிம்முப்பேர்
கதழ்வுவேகஞ்சிறப்பாங்களிசெருக்கொடுகுழம்பு
மதுகமேயிருப்பையட்டிமதுரமாந்தராவுமாமே
சிதடனந்தகன் [illegible] னபேர்திதிபக்கநிலைபேறும்பேர். (உ)

ஆதனருயிரோர்வில்லானங்கியென்பதுதீச்சட்டை
போதகம்யானைகன்றுபோற்றியவிளமைக்கும்பேர்
ஏதந்துன்பங்குற்றபேரீமமேமயானங்காட்டம்
சூதன்றேர்ப்பாகன்சூதன்சுவேதமேவெயர்வுவெண்மை. (௩)

சூதமாமரமேவண்டுசூதுடனிரதந்தோன்றல்
சூதகமேயாசௌசந்தோகைமார்தோயாப்பூப்பாம்
பூதமாலிறந்தகாலம்புனிதன்மைம்பூதஞ்சீவன்
மாதவந்தவம்வசந்தம்வாதமேதருக்கங்காற்றும். (௪)

மதன்வலிவேள்வனப்பாம்வலித்தலேவளைத்தல்பேசல்
பதங்கம்புட்பொதுவிட்டிற்பேர்பலிபூசைபிச்சைநீறும்
சிதம்விண்மீன்ஞானம்வெள்ளைசெயமுறப்பட்டதாமே
நிதம்பமேயல்குலென்பநெடுமலைப்பக்கமும்பேர். (௫)

அண்டசமென்பது—முதலை, ஓந்தி, அரணை, பறவை, உடும்பு, பல்லி, நண்டு, மீன், தவளை, ஆமை, பாம்பு, இப்பி. கஉ.
சண்டன்—இயமன், அலி, சூரியன். ௩. தாள்-கதவுறுதாள், பாதம்.
சண்டை—சண்டைச்செடி, கள். உ. சொர்க்கம்-தேவலோகம், மூலை.

பணம்—பாம்பின்படம், பாம்பு, பொற்காசு. ௩. மணம்—வாசனை, கூட்டம், விவாகம். ௩.
பணவை—பரண், பேய். உ. பையுள்—அறபழ், நோய். உ.
நுணவை—எண்ணோலை, மா. உ. நுனி—நுதி, நுட்பம். உ.

---

# தகரவெதுகை.

---

மதலையென்பது—கொன்றைமரம், மகன், மரக்கலம், கொடுங்கை, தூண். ரு. சிதலை—நோய, சீலைதுணி, கறையான். ௩.
சீதம்-நீர், குளிர், மேகம். ௩. பதலை-ஒருகட்பகுவாய்ப்பறை, மலை, சாடி. ௩ கதலி-வாழை, தேற்றுமரம், காற்றுடி, விருதுக்கொடி. ச.

இதழ்—பனையேடு, பூவிதழ், உதடு. ௩. கதழ்வு—விரைவு, சிறப்பு.
களி—களிப்பு, குழம்பு. உ. மதுகம்—இருப்பைமரம், எட்டிமரம், அதிமதுரம், தரா. * ச. சிதடன்—குருடன், மூடன். உ.
திதி—பிரதமைமுதலியதிதி, நிலைபெறுதல். உ.

ஆதன்—உயிர், அறிவிலான். உ. அங்கி—நெருப்பு, சட்டை. உ.
போதகம்—யானைக்கன்று, இளமை. உ. ஏதம்—துன்பம், குற்றம். உ. ஈமம்—சுடுகாடு, விறகு. உ. சூதன்—தேர்ப்பாகன், சூதாடுவோன். உ. சுவேதம்—வேர்வு, வெண்மை. உ.

சூதம்—மாமரம், வண்டு, சூது, இரசம், பிறப்பு. ரு.
சூதகம்—ஆசௌசம், பூப்பு. உ.
பூதம்—ஆலமரம், இறந்தகாலம், சுத்தம், ஐம்பூதம், உயிர். ரு.
மாதவம்—தவம், வசந்தகாலம். உ. வாதம்—தருக்கம், காற்று. உ.

மதன்-வலிமை, மன்மதன், அழகு. ௩. வலித்தல்-வளைத்தல், பேசல்.
பதங்கம்—பறவைப்பொது, விட்டிற்பறவை. உ. பலி—பூசை, பிச்சை, நீறு. ௩.
சிதம்—நக்ஷத்திரம், ஞானம், வெண்மை, வெற்றிகொள்ளப்பட்டது.
நிதம்பம்—அல்குல், மலைப்பக்கம். உ.

* தரா - பொன்முதலிய ஏழுலோகங்களு ளொன்று.

சதியுரோகிணிகற்பாட்டிவஞ்சனைதாளவொத்து
விதியென்பவினையயன்பேர்வேட்டுவன்மகன்வேடன்
பதியிறைகேள்வனூராம்பதுக்கையேபாறைதூறு
பிதிர்கதைநொடிதூவற்பேர்பிண்டமேதிரளைபிச்சை. (௬)

ஆதியேமுதனேரோடலருகன்மாலீசன்வேதன்
பூதியம்புவியுடற்பேர்பொம்மலேபொலிவுஞ்சோறும்
பாதிரிபாடலப்பேர்பணைத்தெழுமூங்கிற்கும்பேர்
ஏதியாயுதம்வாளென்பவிழைநூலாபரணமாமே. (௭)

சாதியேபிரம்புகள்ளோர்தருசிறுசண்பகப்பேர்
போதஞானந்தோணிப்பேர்புகல்குதிருடல்சொல்வெற்றி
ஓதிபெண்மயிரேபூனையோந்திமெய்ஞ்ஞானம்வெற்பாம்
ஓதிமமன்னம்வெற்பாமுருத்தலேதோற்றல்கோபம். (௮)

சுதைமகள்கறவாத்தேனுசுண்ணச்சாந்தமுதுநாற்பேர்
புதையென்பகணையின்கட்டும்புதுமையுமறைவுமுப்பேர்
மதுவென்பநறவுந்தேனும்வசந்தகாலமுமாமென்ப
கதைதண்டாயுதமேவார்த்தைகாரணமிம்முப்பேரே. (௯)

சீதையேபொன்னுங்காணிபடைச்சால்சீராமன்றேவி
மேதைதோல்புதனிறைச்சிமிக்கபேரறிவுகள்ளாம்
கோதைமுன்கைத்தோற்கட்டிகுழலூர்காற்றொழுங்குசேரன்
ஓதைபேரொலிமதிற்பேருக்கந்தீயிடையானேறு. (௧௦)

அத்தம்பொன்பாதிகைகண்ணாடிசொற்பொருள்காடோர்நாள்
புத்தகங்கோசமென்பசித்திரப்படாமுமாமே
நத்தமேயிருளுமூருநந்துடனிரவுநாற்பேர்
துத்தமோரிசைநாய்பாலேவயிறுகண்மருந்துஞ்சொல்லும். (௧௧)

அததென்பவரைஞாண்செம்மையசைச்சொலோடிசைப்புநாற்பேர்
தொத்துப்பூங்கொத்துத்தொண்டாந்தூம்புவேய்துளைமரக்கால்
தத்தைமூத்தாள்கிளிக்காந்தழல்கிளிகடிகோல்செந்தீ
உத்தரமூழித்தீயேலொடுமறுமொழிவடக்காம். (௧௨)

கூத்தனேயுயிர்நடன்பேர்குலங்குடிகோயில்கூட்டம்
ஊழ்த்தலேவினைத்தல்செவ்வியுறுபதனழிவுமுப்பேர்
பாத்தென்பகஞ்சிசோறுபகுத்திடல்வகுத்தமுப்பேர்
தீர்த்தமேவிழாவுநீருந்தீர்த்தனேயருகனுஞ்சான். (௧௩)

சதியென்பது—உரோகிணிநக்ஷத்திரம், கற்புடையாள், வஞ்சனை, தாளவொத்து. ௪. விதி-செய்தொழில், பிரமன். ௨. வேட்டுவன்-மகநக்ஷத்திரம், வேடன். ௨.
பதி—அரசன், நாயகன், ஊர். ௩. பதுக்கை—பாறை, சிறுதூறு. ௨.
பிதிர்—கதை, கைநொடி, தூவல். ௩. பிண்டம்—திரட்சி, பிச்சை.

ஆதி—முதல், நேரோடல், அருகன், திருமால், சிவன், பிரமன். ௬.
பூதியம்—பூமி, சரீரம். ௨. பொம்மல்—பொலிவு, சோறு. ௨.
பாதிரி—பாதிரிமரம், மூங்கில். ௨. ஏதி—ஆயுதம், வாள். ௨.
இழை—நூல், ஆபரணம். ௨.

சாதி—பிரம்பு, கள், தேக்கமரம், சிறுசண்பகம். ௪.
போதம்—ஞானம், மரக்கலம். ௨. புகல்—குதிர், சரீரம், சொல், வெற்றி ௪. ஓதி—பெண்மயிர், பூனை, ஓந்தி, ஞானம், மலை. ௫.
ஓதிமம்—அன்னப்புள், மலை. ௨. உருத்தல்—தோன்றுதல், கோபம்.

சுதை—மகள், உதைகாற்பசு, சுண்ணச்சாந்து, அமிர்தம். ௪.
புதை—அம்புக்கட்டு, புதுமை, மறைவு. ௩.
மது—கள், தேன், வசந்தகாலம். ௩.
கதை—தண்டாயுதம், சொல், காரணம். ௩.

சிதை—பொன்றுங்காணி, உழுபடைச்சால், சீதை. ௩.
மேதை—தோல், புதன், இறைச்சி, பேரறிவு, கள். ௫.
கோதை—கைக்கட்டி, கூந்தல், பூமாலை, காற்று, ஒழுங்கு, சேரன்.
ஓதை—பேரொலி, மதில். ௨. உக்கம்—நெருப்பு, இடை, பசு, எருது.

அத்தம்—பொன், பாதி, கை, கண்ணாடி, சொற்பொருள், காடு, ஒருநக்ஷத்திரம். ௭. புத்தகம்—புத்தகம், சித்திரப்படாம். ௨.
நத்தம்—இருள், ஊர், சங்கு, இராத்திரி. ௪.
துத்தம்—ஏழிசையுளொன்று, நாய், பால், வயிறு, கண்மருந்து. ௫.

அத்து—அரைஞாண், சிவப்பு, ஒருசாரியை, தைத்தல். ௪.
தொத்து—பூங்கொத்து, அடிமை ௨. தூம்பு—மூங்கில், உட்டுளை, மரக்கால். ௩.
தத்தை—முன்பிறந்தாள், கிளி. ௨. தழல்—கிளிகடிகோல், நெருப்பு.
உத்தரம்—வடவாமுகாக்கினி, மேல், மறுமொழி, வடக்கு. ௪.

கூத்தன்—உயிர், நாடகன். ௨. குலம்—சாதி, அரசில், கூட்டம். ௩.
ஊழ்த்தல்—நினைத்தல், பருவம், பதனழிவு. ௩.
பாத்து—கஞ்சி, சோறு, பகுத்திடல். ௩.
தீர்த்தம்—திருவிழா, நீர். ௨. தீர்த்தன்—அருகன், குரு. ௨.

குத்திமண்ணடக்கமென்பகோணம்வாள்குதிரைமூக்காம்
பத்தியேமுறையொழுக்கம்பகர்வழிபாடுமுப்பேர்
அத்தியார்கலியேயானையதவெலும்பாகநாற்பேர்
சத்தியஞ்சபதமெய்யாந்தபுதலேசாவுங்கேடும். (௧௪)

பித்திகைகருமுகைக்குப்பெயர்சுவர்த்தலமுமாகும்
கத்திகைதொடைவிகற்பந்துவசமேகமழவாசந்தி
உத்திசெந்திருவுரூப்புச்சுணங்குரையாடன்முப்போ
துத்தியேசுணங்குபாம்பின்சுடர்ப்பொறிபுதலொன்றுமே. (௧௫)

சித்திரபானுசெந்தீதிவாகரனுண்டொன்றின்பேர்
பத்திரமிலைவனப்புப்படைநன்மைசிறகேபாணம்
சித்திரமழகோர்பாடல்சிறந்தவிம்மிதமேரண்டாம்
சத்திரங்குடையேயன்னசாலைகைவிடாவேல்வேள்வி. (௧௬)

காத்திரங்கனமெய்சிற்றங்களிறதின்முன்காலேகீரி
நேத்திரங்கண்பட்டாடைநீலியேகருமைதுர்க்கை
கோத்திரம்புடவிதானேகுலமொடுமலையுமாமே
பாத்தியேசிறுசெய்யில்லம்பகுத்தலும்வகுத்தநாமம். (௧௭)

சதமிலையிறகுநூறுசத்தமேயோசையேழாம்
கதவமேகதவுகாப்பாங்கழங்குபேய்கடங்கழற்சி
பதமூரலின்பஞ்செவ்விபதவிதாள்வரிசைவார்த்தை
மதியோர்முன்னிலையைச்சொன்மாதமம்புலிபுத்திப்பேர். (௧௮)

பீதகஞ்சாந்துபொன்மைபெருந்தனமிருவேலிப்பேர்
சாதகம்வானம்பாடிசனனம்பாரிடமுப்பேரே
சேதகஞ்சேறுசெம்மைதேயந்தானுடம்புநாடாம்
மாதரோரிடைச்சொல்காதல்வனப்பொடுமகளிராமே. (௧௯)

சோதிமாலருகன்பானுசுடர்விளக்கீசனோர்நாள்
பூதியேநரகஞ்செல்வந்துர்க்கந்தம்புழுதிநீறும்
வீதியேதெருநேரோடன்மேலென்பதிடம்விண்மேற்காம்
மாதிரந்திசையாகாயமலையானைநிலைமைம்பேரே. (௨௦)

தாதுபொன்முதலாமேழுஞ்சடமுறுதாதோரேழும்
பூதமோரைந்துங்காவிக்கல்லுடன்புகலுநாற்பேர்
வேதிகைபலகைதிண்ணைவெதிரென்பசெவிடுவேணு
கேதுவேசிகிபதாகைகிள்ளைதான்குதிரைதத்தை. (௨௧)

குத்தியென்பது—மண், அடக்கம். ௨. கோணம்—வாள், [கூன்வாள்]
குதிரை, மூக்கு. ௩. பத்தி—முறைமை, ஒழுக்கம், வழிபாடு. ௩.
அத்தி—சமுத்திரம், யானை, அத்திமரம், எலும்பு. ௪.
சத்தியம்—சபதம், உண்மை. ௨. தபுதல்—சாதல், கெடுதல். ௨.

பித்திகை—கருமுகை, சுவர்த்தலம். ௨.
கத்திகை—மாலைவிகற்பம், துகிற்கொடி, குருக்கத்தி. ௩.
உத்தி—சீதேவியென்னுந்தலைக்கோலம், தேமல், சொல்லுதல். ௩.
துத்தி—தேமல், பாம்பின்படப்பொறி, ஒருசெடி. ௩.

சித்திரபானு—நெருப்பு, சூரியன், ஒருவருடம். ௩.
பத்திரம்—இலை, அழகு, ஆயுதம், நன்மை, இறகு, அம்பு. ௬.
சித்திரம்—அழகு, ஒருகவி, அதிசயம், ஆமணக்கு. ௪.
சத்திரம்—குடை, அன்னசாலை, கைவிடாப்படை, யாகம். ௪.

காத்திரம்—கனம், உடம்பு, கோபம், யானைமுன்கால், கிரி. ௫.
நேத்திரம்—கண், பட்டுவஸ்திரம். ௨. நீலி—கறுப்பு, துர்க்கை, ௨.
கோத்திரம்—பூமி, குலம், மலை. ௩.
பாத்தி—சிறுசெய், வீடு, பகுத்தல். ௩.

சதம்—இலை, இறகு, நூறு. ௩. சத்தம்—ஒலி, ஏழு. ௨.
கதவம்—கதவு, காவல். ௨. கழங்கு—வெறியாட்டு, கழற்காய். ௨.
பதம்—சோறு, இன்பம், காலம், பதவி, கால், வரிசை, சொல். ௭.
மதி—ஒருமுன்னிலையசைச்சொல், மாதம், சந்திரன், புத்தி. ௪.

பீதகம்—நால்வகைச்சார்திலொன்று, பொன்னிறம், பொன், இருவேலி. ௪. சாதகம்—வானம்பாடி, பிறப்பு, பூதம். ௩.
சேதகம்—சேறு, சிவப்பு. ௨. தேயம்—சரீரம், நாடு. ௨.
மாதர்—ஓரிடைச்சொல், ஆசை, அழகு, பெண்கள். ௪.

சோதி—திருமால், அருகன், சூரியன், ஒளி, தீபம், சிவன், ஒருநக்ஷத்திரம். ௭. பூதி—நரகம், செல்வம், துர்க்கந்தம், புழுதி, விபூதி. ௫.
வீதி—தெரு, நேரோடல். ௨. மேல்—இடம், ஆகாயம், மேற்கு. ௩.
மாதிரம்—திக்கு, ஆகாயம், மலை, யானை, பூமி. ௫.

தாது—பொன்முதலியவெழுவகைலோகம், இரதமுதலியவெழுவகைத்தாது, மண்முதலியவைவகைப்பூதம், காவிக்கல். ௪.
வேதிகை—கேடகம், திண்ணை. ௨. வெதிர்—செவிடு, மூங்கில். ௨.
கேது—நவக்கிரகத்தொன்று, துகிற்கொடி. ௨. கிள்ளை—குதிரை, கிளி.

கதுப்பேயாண்மயிரும்பெண்பான்மயிரொடுகவுளுமப்பேர்
விதப்பேகம்பிதமிக்காகும்விததம்பொன்பழிப்புஞானம்
அதிர்ப்பொலிநடுக்கமென்பவகப்பாவேயுரிசைமேடை
ஒதுக்கமேநடைமறைப்பாமொருத்தலாண்விலங்குவேழம். (௨௨)

பத்திரிபறவைகாளிபரியிலைபாணமைம்பேர்
அத்திரிகழுதைவின்னொட்டகமபரியசலமம்பாம்
சத்தியேயுமைவேல்கானநல்குடைவலிதுவசந்தாரும்
சத்தியேயகல்வெண்சங்கஞ்சத்தமோர்கருவிக்கும்பேர். (௨௩)

புத்தன்மாலருகன்சாத்தன்பூழிருணகில்பூமிப்பேர்
புத்தேளேபுதுமைதேவாம்பூட்கைதோனமேறகோள்யாளி
னைத்தத்துன்னநகைத்தறபேர்சாறுகள்விழவுதாரும்
முத்தமேபிரியமோட்டமருதநனிலமுத்தாமே. (௨௪)

அத்தனேமூத்தோன்றந்தையரனொடுகுருவுநாற்பேர்
சித்தமேதிடமுள்ளம்போசேகரந்தலைமாவேராம்
கைத்தலேசினங்கைபாகுங்கஞறலேபொலிவுகன்றல்
சித்தென்பசயமேஞானஞ்செயயென்பநிலமேவறபேர். (௨௫)

உத்திரஞ்சித்திரஞ்சோநதொளிருமில்லுருபபோடோநாள
பைத்தலேமுனிவினொடுபசுத்தலும்பகரலாகும்
மத்திகையேசமமட்டிசுடாநிலைத்தண்டுமாலை
மத்தென்பதயிரமத்தோடுமத்தமுமிருபேராமே. (௨௬)

மதர்வுமேவுதல்வளைப்புவலியிடமிகுதியைம்பேர்
புதவென்பகதவோர்புல்லாம்புணர்ச்சியேகலவிகூடல்
சிதருநிதிவலைவண்டுசீலையின்றுணிநாற்பேரே
அதர்வழிபுழுதியாட்டினதருநுண்மணலுமாமே. (௨௭)

முதலைசெங்கிடையிடங்கர்முருக்கெனமொழியலாகும்
அதமிறங்குதல்பாதாளங்கீழுமென்றறையுமப்போ
கதிநடைவிரைவேநான்குகதியொடுகதியுங்காட்டும்
மதமிபமதஞ்செருக்காமாலையேமாயஞ்சதி. (௨௮)

பீதமேசாந்துமஞ்சள்பிங்கலத்தொடுபொன்னைம்பேர்
பேதையோர்பருவமூடன்பெண்டரித்திரனோநாற்பேர்
வாதுவர்யானைப்பாகர்வயப்பரிமாவடிப்போர்
மூதிரையாதிரைப்பேர்முக்கணன்பேருமாமே. (௨௯)

கதுப்பென்பது—ஆண்மயிர், பெண்மயிர், கபோலம். ௩. விதப்பு—
நடுக்கம், மிகுதி. ௨. வித்தம்—பொன், பழிப்பு, ஞானம். ௩.
அதிர்ப்பு—ஒலி, நடுக்கம். ௨ அகப்பா—மதில், மதிலுண்மேடை. ௨.
ஒதுக்கம்—நடை, மறைப்பு. ௨. ஒருத்தல்—ஆண்விலங்கு, யானை. ௨.

பத்திரி—பறவை, காளி, குதிரை, இலை, அம்பு. ௫.
அத்திரி—கழுதை, ஆகாயம், ஒட்டகம், குதிரை, மலை, பர்ணம். ௬.
சத்தி—உமை, வேலாயுதம், *வாந்தி, குடை, வலிமை, துகிற்கொடி.
சுத்தி—அகல், சங்கு, சுத்தம், ஒருகருவி. ௪.

புத்தன்—திருமால், அருகன், புத்தன். ௩. பூழில்—அகில், பூமி. ௨.
புத்தேள்—புதுமை, தெய்வம். ௨. பூட்கை—யானை, மேற்கோள்,
யானையாளி. ௩. தைத்தல்—தைத்தல், அலங்கரித்தல். ௨. சாறு—
கள், உற்சவம், குலை. ௩. முத்தம்—பிரீதி, உதடு, மருதநிலம், முத்து.

அத்தன்—மூத்தோன், பிதா, சிவன், குரு. ௪. சித்தம்—நிச்சயம், மனம்.
சேகரம்—தலை, மாமரம், அழகு. ௩.
கைத்தல்—கோபம், கசப்பு. ௨. கஞறல்—பொலிவு, சினக்குறிப்பு.
சித்து—வெற்றி, ஞானம். ௨. செய—விளைநிலம், செயயெனேவல்.

உத்திரம்—வீட்டினுறுப்பாகியவுத்திரம், ஒருநக்ஷத்திரம். ௨.
பைத்தல்—கோபம், பசுமை. ௨.
மத்திகை—குதிரைச்சம்மட்டி, விளக்குத்தண்டு, மாலை. ௩.
மத்து—தயிர்கடைமத்து, ஊமத்தை. ௨.

மதர்வு—உள்ளக்களிப்பு, அழகு, வலிமை, இடம், மிகுதி. ௫.
புதவு—கதவு, ஒருவகைப்புல். ௨. புணர்ச்சி—கலவி, இயைபு. ௨.
சிதர்—உறி, துளி, வண்டு, சீலைத்துணி. ௪.
அதர்—வழி, புழுதி, ஆட்டினதர், நுண்மணல். ௪.

முதலை—செங்கிடை, முதலை, இறகினடிக்குருத்து. ௩.
அதம்—இறங்குதல், பாதலம், கீழ். ௩.
கதி—நடை, வேகம், தேவகதிமுதலியநாற்கதி, முத்தி. ௪.
மதம்—யானைமதம், செருக்கு. ௨. மாயை—வஞ்சனை, சதி. ௨.

பீதம்—நால்வகைச்சாந்திலொன்று, மஞ்சள், பொன், பொன்னிறம்.
பேதை—பேதைப்பருவம், அறிவிலான், பெண், வறியவன். ௪.
வாதுவர்—யானைப்பாகர், குதிரைப்பாகர். ௨.
மூதிரை—திருவாதிரைநக்ஷத்திரம், சிவன். ௨.

---

* சர்த்தி - வாந்தி.

நாதியேபரணிநாளுமடிமையுமிருபேர்சாற்றும்
போதுதான்காலம்பூவாம்போர்வைதோல்கவசமீக்கோள்
சாதமேதிடம்பதப்பேர்தகைமையேரியல்புபீடாம்
வீதலேகெடுதல்சாவேயிலம்பாடும்விளம்புமுப்போ. (௩௦)

தகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௨௪.



# நகரவெதுகை.

இந்தனமிசையேகாட்டமெரியிடுகனலுமாகும்
சந்தமேநிறமவனப்புச்சாற்றியகவிதைசாந்தம்
கந்தமிநதியம்பகுததல்கழுத்தடிகிழஙகுநாறறம்
மந்திரம்விசாரஙகோயில்வாசியின்குழாம்வீடேகள். (௧)

அந்திலாஙகசையிடப்பேரணவலேயணுகல்புல்லல்
சந்தியேயந்திமூஙகில்சதுக்கமுமிசைப்புமப்போ
நநதியேசிவனூமேறுநந்தியீச்சுரனுமுப்பேர்
உந்திதேருருளேயாறேயுவரிநீர்ச்சுழியேகொப்பூழ. (௨)

கநதுபண்டியுளிருமபுஙகம்பமும்யாக்கைமூட்டும்
கந்துகஙகுதிரைப்பநதாஙகனமென்பபுயல்பாரப்போ
பந்துகந்துகமுமட்டுபபடநீர்தூந்துருத்தியும்பேர்
குந்தள்மாதரோதிகுழறகொத்துக்குருளேமுப்போ. (௩)

வேந்தனேயரசன்றிஙகள்வியாழனிந்திரனுதிததன்
காந்தாரமிசைகாடென்பகாழகஙகருமைதூசாம்
ஏநதலேபெருமைமேடாமெஃகுருக்கொடுவேல்கூாமை
கூந்தல்பெண்மயிர்பீலிப்பேர்குவலயஙகுவளேபூமி. (௪)

அந்தரமுடிவுபேதமண்டமோடிடைநாற்பேரே
கந்தரமெனபமேகஙகழுதநொடுமலைமுழைப்பேர்
மந்தாரந்தருமரஞ்செவ்வரத்தமுமாகுமென்ப
சிந்துரம்புளியேயானேசெங்குடைதிலகஞ்செம்மை. (௫)

கந்தருவம்பண்வாசிகவந்தமென்பதுநீர்மட்டை
குந்தமேயொருவியாதிகுருந்தொடுகுதிரைகைவேல்
செந்துவோர்நரகமோரிசீவனேடணுவுநாற்பேர்
சிந்துநீர்மூச்சிராறுகடல்குறளொருதேசப்பேர். (௬)

தாதியென்பது-பரணிநக்ஷத்திரம்,அடிமை.௨.போது-காலம்,பூ.௨.
போர்வை—தோல், கவசம், மேற்போர்வை. ௩.
சாதம்-உண்மை,சோறு. ௨. தகைமை-அழகு,குணம்,பெருமை.௩.
வீதல்—கெடுதல், சாதல், வறுமையெய்தல். ௩.

# நகரவெதுகை.

இந்தனமென்பது—மேல், விறகு, அக்கினிச்சுவாலை. ௩.
சந்தம்—நிறம், அழகு, கவிதை, சந்தனம். ௪.
கந்தம்—இந்திரியம், பங்கிடல், கழுத்தடி, கிழங்கு, மணம். ௫.
மந்திரம்—ஆலோசனை,தேவர்கோயில்,குதிரைக்கூட்டம்,வீடு,கள்.

அந்தில் என்பதும் ஆங்கு என்பதும்-அசைச்சொல், அவ்விடம். ௨.
அணவல்—கிட்டல், தழுவல். ௨.
சந்தி—மாலைக்காலம், மூங்கில், நாற்சந்தி, இசைப்பு. ௪.
நந்தி—சிவன், இடபம், நந்திதேவன். ௩. உநதி—தேருருள், ஆறு,
கடல், நீர்ச்சுழி, கொப்பூழ். ௫.

கந்து-பண்டியுள் ளிரும்பு,தூண்,சநது. ௩. கந்துகம்-குதிரை,பந்து.
கனம்—மேகம், பாரம். ௨. பந்து—எறியும்பநது, மட்டதருத்தி.
குந்தளம்—பெண்மயிர, மயிர்க்குழற்சி, நரி நாய் பன்றி புலி மான்
முசு முயல் யாளி இவற்றின்குட்டி. ௩.

வேந்தன்—அரசன், சந்திரன், வியாழன், இந்திரன், சூரியன். ௫.
காந்தாரம்—ஓரிசை, காடு. ௨. காழகம்—கறுப்பு, சீலை. ௨.
ஏந்தல்—பெருமை,மேடு.௨. எஃகு—உருக்கு,வேலாயுதம்,கூர்மை.
கூந்தல்—பெண்மயிர், மயிற்பீலி. ௨. குவலயம்—குவளை, பூமி. ௨.

அநதரம்—முடிவு, பேதம், ஆகாயம், இடை. ௪.
கந்தரம்—மேகம், கழுத்து, மலைமுழை. ௩.
மந்தாரம்—ஐந்தருவிலொன்று, செவ்வரததம். ௨.
சிந்துரம்*—புளியமரம்,யானை,சிவப்புக்குடை,பொட்டு,சிவப்பு ௫.

கந்தருவம்—இசை, குதிரை. ௨. கவந்தம்—நீர், உடற்குறை. ௨.
குந்தம்—ஒருநோய், குருநதமரம், குதிரை, கைவேல். ௪.
செந்து—ஒருநரகம், கிழநரி, உயிர், அணு. ௪.
சிந்து—நீர், முச்சீரடி, ஆறு, கடல், குறள், ஒருதேசம். ௬.

* சிந்தூரம் - புளியமரம்.

அந்திமுச்சந்தியாலையாழிசையிரவுமாலை
நந்தென்பரத்தைசங்காராறுதன்மணமுண்டாதல்
மைந்தனேதிறலோன்சேயாம்வசந்தமேவேனில்வாசம்
வந்தியர்புகழ்வோர்பேருமலடிகள்பேருமாமே. (எ)

விந்தமேமேரெண்ணும்வெற்பும்விருத்தமேவட்டமுப்பாம்
அந்தணரறவோர்பார்ப்பாரணிபடைவகுப்பணிப்பேர்
அந்தகன்குருடன்கூற்றுமங்காரகன்றீச்செவ்வாய்
மந்தனேசனிகூர்ப்பில்லாமழுடனுமிருபேராமே. (அ)

நகரவெதுகை முற்றிற்று.

ஆ விருததம் - கஙஉ.



# பகரவெதுகை.

உப்புமெல்லியலாராடலுவர்கடலினிமைநாற்பேர்
செப்பமேநடுநிலைப்பேர்தெருவொடுநெஞ்சுமாகும்
துப்பரக்கூறறந்தூயமைதுகிர்பகையனுபவப்பேர்
கப்பணமிரும்பிறசெய்தநெரிஞ்சின்முட்கைவேலாமே. (க)

தாபரமலைபோனிறறல்சடமொடுதருவுமுப்பேர்
நீபமுத்தரட்டாதிப்பேர்நிமித்தநீர்க்கடம்புமாகும்
யூபமேகவந்தம்வேள்விக்குறுதம்பம்படைவகுப்பாம்
சாபமேசபிததல்வில்லாந்தளிமமேயழகுமெத்தை. (உ)

சீப்பென்பகதவிற்றாழுஞ்சீவுகங்கமுமாமென்ப
நாப்பணென்பதுதேர்த்தட்டுநடுவும்யாழுறுப்புமுப்பேர்
காப்பென்பகாவலோடுகதவும்வெண்ணீறுமாகும்
யாப்பென்பகவிதைகட்டாமிருறேன்கூடெருதுமீனே. (ங)

பகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - கஙரு.



அந்தியென்பது—முச்சந்தி, பாலையாழிசை, இரா, மாலைக்காலம். ௪.
நந்து—நத்தை, சங்கு. ௨. நாறுதல்—மணத்தல், உண்டாதல். ௨.
மைந்தன்—திண்ணியன், மகன். ௨. வசந்தம்-இளவேனில், வாசனை.
வந்தியர்—புகழ்வோர், மலடிகள். ௨.

விந்தம்—ஒரெண், ஒருமலை. ௨. விருத்தம்—வட்டம், மூப்பு. ௨.
அந்தணர்-முனிவர், பார்ப்பார். ௨. அணி-படைவகுப்பு, ஆபரணம்.
அந்தகன்—குருடன், யமன். ௨. அங்காரகன்—நெருப்பு, செவ்வாய்.
மந்தன்—சனி, கூர்மையில்லான். ௨.



# பகரவெதுகை.



உப்பென்பது—மகளிர்விளையாட்டு, உவா, கடல், இனிமை. ௪.
செப்பம—நடுநிலை, வீதி, மாாபு. ௩.
துப்பு—அரககு, வலி, சுததம், பவளம், பகை, அனுபவம். ௬.
கயபணம—இருமபினியறறியகொிஞசினமுள, கைவேல். ௨.

தாபரம—மலைபோனிற்றல், உடம்பு, மரபபொது. ௩.
நீபம—உததரட்டாதி, காரணம் *, நீாக்கடமபு. ௩.
யூபம்—உடற்குறை, வேள்விததூண், படைவகுப்பு. ௩.
சாபம்—சபிததல், வில். ௨. தளிமம்—அழகு, மெததை. ௨.

சிப்பு—கதவிடுதாழ், சிபபு. ௨. நாப்பண்—தோததட்டு, நடு, யாழிறுபபு. ௩.
காபபு—காவல், கதவு, திருநீறு. ௩.
யாப்பு—பாட்டு, கட்டு. ௨.
இறால்—தேன்கூடு, எருது, ஒருமீன். ௩.

* நீபம் - காரணம்.

# மகரவெதுகை.

---

சமன்யமனடுவுமாகுஞ்சலமென்பவயிரநீர்பொய்.
கமலநீர்வனசமும்பேர்கலாஞ்சினங்கொடுமையாகும்
குமரிகற்றாழைகன்னிகொற்றவைகாளிக்கும்பேர்
ஞமலிநாய்மயில்கள்ளென்பநனைகள்ளுமலர்மொட்டும்பேர். (க)

சாமமோர்வேதம்பச்சைசாமமேகருமைநாற்பேர்
வாமமேகுறளிடப்பால்வனப்பொடுதொடையுமாமே
பூமலர்வனப்புக்கூர்மைபொலிவொடுபிறப்புப்பூமி
ஏமமேசேமங்காவலின்பம்பொன்னிரவேமையல். (உ)

உம்பரேதேவராகுமுயர்நிலமுடன்மேலும்பேர்
வம்பென்பபுதுமைகச்சுமணநிலையின்மைநாற்பேர்
கும்பமேகுடமிராசிகும்பிமத்தகமுமாகும்
தும்பென்பசிம்புதோடாஞ்சுகமென்பகிளியேயின்பம். (௩)

ஆம்பல்வேய்கள்ளுக்கவ்வையல்லிவங்கியமேயானை
சாம்பல்கூம்புதல்பழம்பூத்தமிழென்பதினிமைநீர்மை
தாம்பென்பகயிறுதானேதாமணிதனக்கும்பேராம்
காம்புவேய்மலர்த்தாள்பட்டேகடிமலர்க்கொம்புநாற்பேர். (௪)

அம்மையேவருபிறப்புமழகுமாந்தாயுமாகும்
சும்மையென்பதுவேநெற்போர்நாடொலிசுமையுஞ்சொல்லும்
செம்மைசெவ்வையுஞ்சிவப்புந்திரிதலேயுலாவல்கேடாம்
கொம்மையேயிளமைவட்டங்கொங்கைகைகுவித்துக்கொட்டல். ()

அம்மழகசைச்சொனீராமழனந்திபிணமுமாகும்
கம்மென்பதலையாகாயங்கனங்காணீர்வீதிவெளுப்புச்
செம்மலேபழம்பூவீசன்சினேந்திரன்சிறந்தோன்மைந்தன்
கம்மியர்கைவினைப்பேர்கண்ணாளர்தாமுமாமே. (௬)

வாமனங்குறள்புராணமாதிரக்கயத்திலொன்றும்
காமரமத்தநாளோடுப்பிசைப்பொதுவுங்காட்டும்
நேமிசக்கரம்பார்வட்டநேமிப்புட்கடலும்பேரே
தேமென்பதிடந்தித்திப்பத்தேனூற்றந்திசைதேசப்பேர். (எ)

தாமம்வெற்பொழுங்குகொன்றைசாந்தொளிநகரந்தாம்பு
பூமணிக்கோவைமாலைபொருகளங்கரியீராறும்
சோமனோர்வள்ளலிந்துசுரும்பென்பமலையும்வண்டும்
சாமியேமுதல்வன்செவ்வேடலைவியாசான்வெறுக்கை. (௮)

# மகரவெதுகை.

சமனென்பது—யமன், நடு. ௨. சலம்—நெடுங்காலமாகநிகழுங் கோபம், நீர், பொய். ௩. கமலம்—நீர், தாமரை. ௨. கலாம்—கோபம், கொடுமை. ௨. குமரி—கற்றாழை, கன்னி, துர்க்கை, காளி. ௪. ஞமலி—நாய், மயில், கள். ௩. நனை—கள், பூவரும்பு. ௨.

சாமம்—ஒருவேதம், பச்சை, யாமம், கருமை. ௪.
வாமம்—குறுமை, இடப்பக்கம், அழகு, தொடை. ௪.
பூ—மலர், அழகு, கூர்மை, பொலிவு, பிறப்பு, பூமி. ௬.
ஏமம்—பதையல், காவல், இன்பம், பொன், இரா, மயக்கம். ௬.

உம்பர்—தேவர், தேவலோகம், மேல். ௩.
வம்பு—புதுமை, முலைக்கச்சு, மணம், நிலையின்மை. ௪.
கும்பம்—குடம், ஓரிராசி, யானைமத்தகம். ௩
தும்பு—சிம்பு, பனைமுதலியவற்றினேடு. ௨. சுகம்—கிளி, இன்பம்

ஆம்பல்—மூங்கில், கள், துன்பம், அல்லி, இன்னிசைக்குழல், யானை
சாம்பல்—ஒடுங்குதல், பழம்பூ. ௨. தமிழ்—இனிமை, குணம். ௨
தாம்பு—கயிறு, பசுக்கட்டுங்கயிறு. ௨
காம்பு—மூங்கில், பூவின்காம்பு, பட்டுவிகற்பம், மரக்கொம்பு. ௪

அம்மை—வருபிறப்பு, அழகு, தாய். ௩. சும்மை—நெற்போர், நாடு, ஒலி, சுமை. ௪. செம்மை—செவ்வை, சிவப்பு. ௨.
திரிதல்—உலாவல், கேடு. ௨. கொம்மை—இளமை, வட்டம், முலை, குடங்கையைக்குவித்துக் கொட்டல். ௪.

அம்—அழகு, ஓரசைச்சொல், நீர். ௩. அழனம்—நெருப்பு, பிணம்.
கம்—தலை, ஆகாயம், மேகம், காற்று, நீர், பிரமன், வெண்மை. ௭.
செம்மல்—பழம்பூ, சிவன், அருகன், பெருமையிற்சிறந்தோன், மகன்.
கம்மியர்—தொழில்செய்வோர், கம்மாளர். ௨.

வாமனம்—குறள், சிவபுராணத்துளொன்று, தென்றிசையானை ௩.
காமரம்—அத்தநக்ஷத்திரம், அடுப்பு, இசைப்பொது. ௩.
நேமி—சக்கராயுதம், பூமி, வட்டம், சக்கரவாகப்புள், சமுத்திரம். ௫.
தேம்—இடம், தித்திப்பு, தேன், வாசனை, திக்கு, தேசம். ௬.

தாமம்—மலை, ஒழுங்கு, கொன்றைமரம், சாந்து, ஒளி, ஊர், கயிறு, பூ, மணிவடம், பூமாலை, போர்க்களம், யானை. ௧௨.
சோமன்—ஒருவள்ளல், சந்திரன். ௨. சுரும்பு—மலை, வண்டு. ௨.
சாமி—தலைவன், முருகக்கடவுள், தலைவி, குரு, பொன். ௫.

குமுதமேயடுப்போர்திக்கின்குஞ்சரமொலிவெண்ணெய்தல்
சிமயமேமலைவெற்புச்சிறிதீத்தியோநரகுதீங்காம்
அமறலேபொலிவுதுன்னலரிறாறுபிணக்கமாசு
சிமிலியேகுடுமிசிக்கஞ்சிள்வீடுதானுமாமே. (௯)

சம்புவேயிரவிநாவல்சங்கரனயன்மாலோரி
தும்பியேகளிறுவண்டாந்துன்னலேசெறிதல்சேர்தல்
கம்புளேசங்குசம்பங்கோழியென்றிருபேர்காட்டும்
அம்பரங்கடல்விண்டூசாமண்ணலேதலைவன்பீடு. (௧௦)

கிம்புரிமுடிதந்தப்பூண்கேட்டைதான்முகடியோர்நாள
கும்பிசேறுளைபூதிகுலைதான்செய்கரைகாய்க்கொத்தாம்
உம்பலாண்விலங்குவேழமுயர்குலமெழுச்சிக்கும்பேர்
அம்பலேபழிச்சொல்சில்லோரறிந்தலர்தூற்றலாமே. (௧௧)

கம்பலையச்சமோசைகம்பிதந்துன்பநாற்பேர்
செம்புலம்பாலைசேருந்திணைசெருக்களமிரண்டாம்
தம்பமேகவசந்தூணுஞ்சமழ்த்தலேவருத்தநாணம்
கம்பமேநடுக்கந்தம்பங்கந்தனேயருகன்செவ்வேள். (௧௨)

அமரரேவிபுதர்தெவ்வரவந்திதான்கிளியோருராம்
அமுதுபாறேவருண்டியாகுமின்சுவையுமுப்பேர்
அமலையேயாரவாரமயினியோடுமையுமுப்பேர்
தமமிருளிராகுவின்பேர்சார்ங்கம்விற்பொதுமால்வில்லாம. (௧௩)

ஆம்பிரம்புளிமாதேமாவாம்புளிப்பினுக்குமப்பேர்
சாம்புபொன்பறையாமென்பதாண்டவங்கூத்தேதாவல்
பாம்பென்பகரைமராளம்பையராப்படமேபச்சை
ஆம்பியேயொலிகாளானுமயிராணியுமையிந்திராணி. (௧௪)

காமனேவாசவன்வேள்கழுதுந்திப்பலியுமாகும்
காமமேவிரகமாசைகணிச்சிதான்மழுவேதோட்டி
பூமனேபிரமன்செவ்வாய்புரையோரேகீழோர்மேலோர்
சேமமேகாவலின்பந்தெக்கிணம்வலந்தெற்காகும். (௧௫)

காமுகன்விடன்வேண்மாலாங்காசென்பகொலையுங்காதும்
கோமளம்பசுவனப்புக்கூறியவிளமைக்கும்பேர்
நாமமாங்கலித்தன்மிக்குநற்பொலிவெழுச்சியோசை
மாமையேநிறம்வனப்பாமலயசஞ்சந்தந்தென்றல். (௧௬)

மகரவெதுகை முற்றிற்று.

ஆக விருத்தம் ௧௫௧.

குமுதமென்பது—அடுப்பு, தென்மேற்றிசையானை, பேரொலி, வெண்ணெய்தல். ௪. சிமயம்—மலை, மலையினுச்சி. ௨. தீ—நெருப்பு,நரகம்,தீமை. ௩. அமறல்-பொலிவு,நெருங்கல். ௨. அரில்—சிறுதூறு,பிணக்கு,குற்றம்.௩.சிமிலி-குடுமி,உறி,சிள்வண்டு. ௩.

சம்பு—சூரியன், நாவல், சிவன், பிரமன், திருமால், நரி. ௬.
தும்பி—யானை, வண்டு. ௨. துன்னல்—நெருங்கல், கிட்டல். ௨.
கம்புள்-சங்கு,சம்பங்கோழி.௨.அம்பரம்-கடல்,ஆகாயம்,வஸ்திரம்
அண்ணல்—பெருமையிற்சிறந்தோன், [அரசன்] பெருமை. ௨.

கிம்புரி— முடியுறுப்பைந்தனுளொன்று,யானைக்கொம்பின்பூண்.௨.
கேட்டை—மூதேவி, ஒருநக்ஷத்திரம். ௨. கும்பி—சேறு, யானை, நரகம். ௩. குலை—செய்கரை,கமுகு வாழைமுதலியவற்றின்காய்க்குலை.௨.உம்பல்—ஆண்விலங்கு, யானை,உயர்குலம்,எழுச்சி.௪.
அம்பல்—பழிச்சொல், சிலரறிந்துபுறங்கூறல். ௨.

கம்பலை—பயம், ஒலி, நடுக்கம், துன்பம். ௪.
செம்புலம்—பாலைநிலம், போர்க்களம். ௨. தம்பம்—கவசம்,தூண்.
சமழ்த்தல்—வருத்தம், வெட்கம். ௨. கம்பம்—நடுக்கம், தூண். ௨.
கந்தன்—அருகன, முருகக்கடவுள். ௨.

அமரர்—தேவர், பகைவர்.* ௨. அவந்தி—கிளி, ஓரூர். ௨.
அமுது—பால், தேவருணவு, அமிர்தம். ௩.
அமலை —ஒலி, சோறு, பார்ப்பதி. ௩.
தமம்—இருள்,இராகு. ௨. சார்ங்கம்-விற்பொது,திருமால்வில். ௨.

ஆம்பிரம்— புளிமா, தேமா, புளிப்பு. ௩.
சாம்பு—பொன், பறை. ௨. தாண்டவம் -கூத்து, தாண்டுதல். ௨.
பாம்பு—கரை, பாம்பு. ௨. பை—பாம்பின்படம், பச்சை. ௨.
ஆம்பி—ஒலி, காளான். ௨. அயிராணி— பார்ப்பதி, இந்திராணி.௨.

காமன்—இந்திரன், மன்மதன், வண்டு, திப்பலி. ௪.
காமம்—காமநோய், ஆசை. ௨. கணிச்சி—மழு, தோட்டி. ௨.
பூமன்-பிரமன்,செவ்வாய்.௨. புரையோர்-கீழ்மக்கள்,மேன்மக்கள்.
சேமம்—காவல்,இன்பம்.௨. தெக்கிணம்—வலப்பக்கம் தெற்கு. ௨.

காமுகன்—தூர்த்தன், மன்மதன், திருமால். ௩.
காது—கொலை, செவி. ௨. கோமளம்—பசு, அழகு, இளமை. ௩.
கலித்தல்—மிகுதி, பொலிவு, எழுச்சி, ஒலி. ௪.
மாண்மை—திறம், அழகு. ௨. மலயசம்—சந்தனமரம், தென்றல். ௨.



---

* அமரார் - பகைவர்.

# யகரவெதுகை.

காயமெய்விண்வெண்காயம்பெருங்காயங்கறிகரித்தல்
நேயநெய்யெண்ணெயன்பாநிறமென்பமருமங்காந்தி
ஆயமேகவற்றிற்றாயமாதாயமாதர்கூட்டம்
சாயலென்பதுமேம்பாடுதருமழகுடனேமென்மை. (௧)

வயநீர்புட்பொதுவலிப்பேர்வயல்வெளிபழனமும்பேர்
சயம்வெற்றிசருக்கரைப்பேர்சடமுடல்வஞ்சம்பொய்யாம்
நியமமேநியதிவீதிநிச்சயநகரங்கோயில்
இயமென்பவொலியேவார்தைவாச்சியமிம்முப்பேரே. (௨)

அயமென்பநீர்தடாகமாடுவெம்பரியிரும்பாம்
கயமென்மைகுளமேயாழங்களிறுகீழ்பெருமைதேய்வாம்
பயமென்பசுதைநீரச்சம்பாலொடுபயன்பேரைந்தே
அயனமேவழியினுமமாண்டினிற்பாதிக்கும்பேர். (௩)

பயிரொலிபயிலேலைபைங்கூழ்பறக்கும்புட்குரலிந்நாற்பேர்
கயிளிபேயத்தநாளுங்கைம்மையுமிருபேர்காட்டும்
வயிரமேசெற்றங்கூர்மைவச்சிரமோர்மணியேசேகு
கயில்பிடர்த்தலையேபூணின்கடைப்புணர்விருபேர்தானே. (௪)

ஐயமேபிச்சையேற்குமோடனுமானம்பிச்சை
ஐயனேமூத்தோன்சாத்தனப்பனீச்சுரனாற்பேரே
தொய்யலேயுழவுஞ்சேறுந்துயரமுமகிழ்ச்சியும்பேர்
மொய்செருக்களம்போர்யானைமூசல்வண்டொடுதிரட்போ. (௫)

வயவனேவீரனோடுவலியான்காதலனுமாகும்
குயிறலேசெறிதல்கூவல்குடைதல்பண்ணுதனாற்பேரே
வயினிடமுதரம்வீடாம்வயாக்கருவருத்தங்காதல்
மயல்செத்தைமயக்கம்பேயாமறவரேவயவர்வேடர். (௬)

குயிலேகோகிலமுஞ்சொல்லுங்கொண்மூவுந்துளையுநாற்பேர்
வயமாவேகுதிரைசிங்கமதகரிபுலியுமாகும்
வியலென்பவிசாலம்பீடாம்வேய்துளையொற்றுமூங்கில்
மயிலையேமீனராசிமீனிருவாட்சிமுப்பேர். (௭)

சயிந்தவங்குதிரையோடுதலையுமிந்துப்புமாகும்
குயந்தனமிளமையோடுகூரரிவாளுமுப்பேர்
நயந்தோனேநண்பன்கொண்கனலம்விருச்சிகமேநன்மை
பயம்பென்பதானைவீழும்படுகுழிபள்ளமாமே. (௮)

# யகரவெதுகை.

20734

காயமென்பது—உடல், ஆகாயம், வெண்காயம், பெருங்காயம், மிளகு, கார்ப்பு. சு. நேயம்—நெய், எண்ணெய், அன்பு. ௩. நிறம்—மார்பு, ஒளி. உ. ஆயம்—கவற்றிற்றாயம், இலாபம், பெண்கள்கூட்டம். ௩. சாயல்—மேம்பாடு, அழகு, மென்மை. ௩.

வயம்—நீர், பறவைப்பொது, வலிமை. ௩. வயல்—வெளி, வயல். உ. சயம்—வெற்றி, சருக்கரை. உ. சடம்—சரீரம், வஞ்சனை, பொய். நியமம்—செய்கடன், தெரு, நிச்சயம், நகரம், கோயில். ௫. இயம்—ஒலி, சொல், வாச்சியப்பொது. ௩.

அயம்—நீர், குளம், ஆடு, குதிரை, இரும்பு. ௫. கயம்—மென்மை, குளம், ஆழம், யானை, கீழ்மை, பெருமை, தேய்வு. எ. பயம்—அமிர்தம், நீர், அச்சம், பால், பயன். ௫. அயனம்—வழி, ஆண்டிற்பாதி. உ.

பயிர்—ஒலி, பயில், பயிர், பறவைக்குரல். ச. கயினி—அத்தநக்ஷத்திரம், விதவை. உ. வயிரம்—நெடுங்காலநிகழுங்கோபம், கூர்மை, வச்சிராயுதம், வைரமணி, மரவயிரம். ௫. கயில்—பிடர், ஆபரணக்கடைப்புணர்வு. உ.

ஐயம்—பிச்சையேற்குமட்கலம், சந்தேகம், பிச்சை. ௩. ஐயன்—மூத்தோன், ஐயனார், பிதா, கடவுள். ச. தொய்யல்—உழவு, சேறு, துன்பம், களிப்பு. ச. மொய்—போர்க்களம், போர், யானை, மொய்த்தல், வண்டு, கூட்டம்.

வயவன்—வீரன், வலியானென்னும்புள், கணவன். ௩. குயிறல்—நெருங்கல், அழைத்தல், துளைத்தல், செய்தல். ச. வயின்—இடம் வயிறு, வீடு. ௩. வயா-கருப்பம், வருத்தம், [கருப்பவேதனை] ஆசை மயல்—செத்தை, மயக்கம், பேய். ௩. மறவர்—படைவீரர், வேடர்

குயில்—ஒருபட்சி, வார்த்தை, * மேகம், துளை. ச
வயமா—குதிரை, சிங்கம், யானை, புலி. ச
வியல்—அகலம், பெருமை. உ. வேய்—உட்டுளை, ஒற்று, மூங்கில்
மயிலை—மீனராசி, மீன், இருவாட்சி. ௩

சயிந்தவம்—குதிரை, தலை, இந்துப்பு. ௩
குயம்—முலை, இளமை, அரிவாள். ௩.
நயந்தோன்-தோழன், கணவன். உ. நலம்-விருச்சிகவிராசி, நன்மை
பயம்பு—யானைப்படுகுழி, பள்ளம். உ.

* சயிலம் - மேகம்.

இயனடைதமிழ்சாயற்பேரேல்லையேபொழுதுவாவி
குய்யென்பகறிகரித்தல்குளிர்நறும்புகையிரண்டாம்
செயிரென்பசினங்குற்றப்பேர்சேடிவிஞ்ஞையரூர்பாங்கி
உயவைகாக்கணைமேமுல்லையுற்றகான்யாறுமாமே. (௯)

செய்யலேயொழுக்கங்காவல்சேறுசெய்வினைநாற்பேரே
நெய்தலேகடற்சார்பூமிநெய்தற்பூச்சாபறைப்பேர்
வெய்யோனுதவனேதீயோன்விரும்பினன்றனக்குமப்பேர்
ஐயையேயுமையாடுர்க்கைமகளருந்தவப்பெண்ணுசாள். (௧௦)

ஐயழகிடைச்சொல்கோழையரசனோடிருமல்சாமி
மையென்பதஞ்சனங்கார்மலடிருளாடுமாசாம்
கையிடம்படையுறுப்பொப்பனைசெங்கைசிறுமைசீலம்
வையந்தேரேறுரோணிவசுந்தரைசிவிகையூர்தி. (௧௧)

சேய்குகனிளமைதூரஞ்செம்மைசேண்சிறுவன்செவ்வாய
வாய்குழலிடம்வாயமைப்பேர்மாருதியனுமன்வீமன்
ஆய்தலேநுணுக்கநேர்தலாறென்பவழிநதிப்பேர்
வேய்தல்சூடிதன்மூடறபேர்விநாயகனருகன்முன்னோன். (௧௨)

அயிர்கரும்பின்றேங்கட்டியான்றநுண்மணலேநுண்மை
செயவெழுழிலொழுககமெனபதெய்வமேகடவுளூழாம்
நயமெனபமகிழசசியின்பநன்மைநறபயனாற்பேரே
பெயரென்பபெருமைகீர்த்திபேசுநாமப்பேராமே. (௧௩)

யகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௧௬௪.

—○○✻○○—

# ரகரவெதுகை.

சிரகமேகரகமாகுஞ்சென்னியிற்சோடுமப்பேர் *
கரகமேயாலங்கட்டிகமண்டலந்துளிநீர்கங்கை
மரபுதான்முறைமைதொன்மைமறலென்பபிணக்குங்கூற்றும்
சரபமெண்காற்புள்ளென்பவரையாடுதானுமாமே. (௧)

இரதமேபுணர்ச்சிசூதமின்சுவையரைஞாண்பொற்றேர்
அரணமேகவசங்காடேயணிமதில்வேலிநாற்பேர்
கரணமெண்மனுதிகூத்துக்கலவிகாரணமும்பேரே
சரணந்தாண்மறைபுகற்பேர்தன்னமான்கன்றேயற்பம். (௨)

* சென்னியிற்றிராணமும்பேர் என்றும் பாடம்.

இயலென்பது—ஒழுக்கம், இயற்றமிழ், சாயல். ௩. ஏல்வை—
காலம், தடாகம். ௨. குய்—தாளித்தல், நறும்புகை. ௨.
செயிர்—கோபம்,குற்றம். ௨. சேடி-வித்தியாதரருலகு,தோழி.௨.
உயவை—காக்கணங்கொடி, முல்லைக்கொடி, கான்யாறு. ௩.

செய்யல்—ஒழுக்கம், காவல், சேறு, செய்தொழில். ௪.
நெய்தல்—கடல்சார்ந்தநிலம், நெய்தற்பூ, சாபறை. ௩.
வெய்யோன்—சூரியன், கொடியோன், விருப்புற்றோன். ௩.
ஐயை—பார்ப்பதி, துர்க்கை, மகள், தவப்பெண், தலைவி. ௫.

ஐ—அழகு,ஓரிடைச்சொல்,கோழை,அரசன்,இருமல்,தலைவன். ௬.
மை—அஞ்சனம்,மேகம்,மலடு,இருள்,ஆடு,குற்றம். ௬. கை-இடம்,
படையுறுப்பு, அலங்காரம், கைத்தலம், சிறுமை, ஒழுக்கம். ௭.
வையம்-தேர், எருது, உரோகிணிநக்ஷத்திரம்,பூமி,சிவிகை,வானம்.

சேய்—முருகக்கடவுள், இளமை, தூரம், சிவப்பு, நீளம், மகன்,
செவ்வாய். ௭.
வாய்—ஊதுகுழல்,இடம்,உண்மை. ௩. மாருதி—அனுமன்,வீமன்.
ஆய்தல்—நுண்மை,ஆராய்தல். ௨. ஆறு—வழி,நதி. ௨. வேய்தல்-
சூடுதல், மூடுதல். ௨. விநாயகன்—அருகன், விநாயகக்கடவுள.

அயிர்—கண்டசர்க்கரை, நுண்மணல், நுண்மை. ௩.
செயல்—தொழில், ஒழுக்கம். ௨. தெய்வம்—கடவுள், ஊழ். ௨.
நயம்—மகிழ்ச்சி, இன்பம், நன்மை, நறபயன. ௪.
பெயர்—பெருமை, புகழ, நாமம். ௩.

---

# ரகரவெதுகை.

---

சிரகமென்பது—கரகம், தலைச்சிரா. ௨.
கரகம்—ஆலங்கட்டி, கமண்டலம், நீர்த்துளி, நீர், கங்கை. ௫.
மரபு—முறைமை, பழமை. ௨. மறல்—பிணக்கு, யமன். ௨.
சரபம்—எண்காற்புள், வரையாடு. ௨.

இரதம்—புணர்ச்சி, பாதரசம், இனிமை, அரைஞாண், தேர். ௫.
அரணம்—கவசம், காடு, மதில், வேலி. ௪.
கரணம்—எண், மனமுதலியகரணம், கூத்தின்விகற்பம், காத
லோர்கூட்டம், காரணம். ௫. சரணம்—கால், அடைக்கலம்பு
குதல். ௨. தன்னம்—பசுவின்கன்று, அற்பம். ௨.

உரமென்பவலியேஞானமூக்கமேமார்புநாற்பேர்
சிரமென்பநெடுங்காலப்பேர்சென்னியுமன்னதேயாம்
புரமென்பபுரிமுன்மெய்ப்பேர்புரவலன்வள்ளல்வேந்தன்
கரமென்பகிரணஞ்செங்கைகழுதைநஞ்சிறுத்தலும்பேர். (௩

அரவநூபுரம்பாம்போசையாய்வென்பவருத்தமாய்தல்
பரவைவாரிதிபரப்புப்பங்கயமாதின்கூத்தே
இரலையேகலையூதுங்கொம்பிரண்டுடன்முதலுமென்ப
அரசுமன்னிராச்சியப்பேரம்பிநாவாயேதெப்பம். (௪

அரம்பைதெய்வப்பெண்வாழையாணுமேயிரதந்தன்மை
சரந்தனிமணிவடம்போர்சாயகநாணற்புற்பேர்
நரந்தமென்பதுநாரத்தைநாறுங்கத்தூரிக்கும்பேர்
சுருங்கையேகரந்துபண்ணுங்கற்படைநுழைவாயிற்பேர். (௫

ஆரமேபதக்கமுத்தமாத்திசந்தனமேமாலை
வாரநீர்க்கரையேயன்புமலைச்சாரல்கிழமைபங்காம்
தாரம்வல்லிசைநாவெள்ளிதலைவியோரிசைகண்ணென்ப
கோரஞ்சோழன்மாவட்டில்கொடுமைபூமொட்டுவாசி. (௬

இராசியமறைவேயோனியிறப்பென்பமிகுதியோக்காம
பராகமேயிரேணுவாகும்பரிமளமலர்த்தூளும்பேர்
துரோணமேசிமபுள்காக்கைதும்பைவில்லொடுபதக்காம்
இராகமேகீதஞ்செம்மையிச்சையேநிறமுமேறகும். (௭

பரிபரிசுமத்தல்வேகம்பாதுகாத்திடல்வருத்தம்
புரிவளைவிரும்பல்செய்தல்புரத்தொடுகயிறுகட்டாம்
பரிதலேயறுத்தலன்புபகர்ந்திடிலிரங்கலும்பேர்
வரிசுணங்கெழுத்துபாட்டுவாரிதியிறையேநெல்லு. (௮

சரிகரவளைவழிப்பேர்சராவமேயகல்சலாகை
கரியவன்சனியின்பேராங்கண்ணனிந்திரனுமாமே
பரிகமேகிடங்குமேடைபகர்மதில்கணையநாற்பேர்
கரில்குற்றங்காழ்த்தலும்பேர்காதைசொற்கதையுமாமே. (௯

மூரியேபெருமையாற்றன்முறைபீடுகெரிவுமாமே
வாரிநீர்கதவுவெள்ளமதில்கடல்வருவாய்வட்டை
நாரிபன்னாடைபெண்ணேநறவுவின்னாணிநாற்பேர்
பாரியோர்வள்ளல்கட்டில்பாரிகட்சேறுமூர்நீர். (௰

உரமென்பது—வலிமை, ஞானம், உள்ளக்கிளர்ச்சி, மார்பு. ச.
சிரம்—நெடுங்காலம், தலை. உ. புரம்—மருதநிலத்தூர், முன்,
உடம்பு. ஈ. புரவலன்—கொடையுளோன், அரசன். உ.
கரம்—சூரியகிரணம், கை, கழுதை, நஞ்சு, குடியிறை. ரு.

அரவம்—சிலம்பு,பாம்பு,ஒலி. ஈ. ஆப்வு—வருத்தம்,ஆராய்தல்.உ.
பரவை—கடல், பரப்பு, திருமகளாடல். ஈ.
இரலை—கலைமான், ஊதுகொம்பு, அச்சுவினிநக்ஷத்திரம். ஈ.
அரசு—அரசன், இராச்சியம். உ. அம்பி—மரக்கலம், தெப்பம். உ.

அரம்பை—தெய்வப்பெண், வாழை. உ. ஆறு—இனிமை, நன்மை.
சரம்—மணிவடம், யுத்தம், அம்பு, நாணற்புல். ச.
நரந்தம்—நாரத்தை, கஸ்தூரி. உ. சுருங்கை—கோட்டையிற்கள்ள
வழி, நுழைவாயில். உ.

ஆரம்—பதக்கம், முத்து, ஆத்திமரம், சந்தனமரம், பூமாலை. ரு.
வாரம்—நீர்க்கரை, அன்பு, மலைச்சாரல், கிழமை, பங்கு. ரு.
தாரம்—வல்லிசை, நா, வெள்ளி, மனைவி,ஏழிசையுளொன்று,கண்.
கோரம்—சோழன்குதிரை, வட்டில், கொடுமை, பூவரும்பு,குதிரை.

இராசியம்—மறைவு,பெண்குறி. உ. இறப்பு—மிகுதி,போதல். உ.
பராகம்—துகள்,பூந்தாது. உ. துரோணம்-எண்காற்பட்சி,காகம்,
தும்பை, வில், பதக்கு. ரு.
இராகம்—இசைப்பாட்டு, சிவப்பு, ஆசை, நிறம். ச.

பரி—குதிரை, சுமத்தல், சீக்கிரம், பாதுகாத்தல், வருத்தம். ரு.
புரி—சங்கு, விரும்புதல், செய்தல், நகரம், கயிறு, கட்டு. சா.
பரிதல்—அறுத்தல், அன்புசெய்தல், இரங்கல். ஈ.
வரி—தேமல்,எழுத்து,இசைப்பாட்டு, கடல், குடியிறை, நெல். சா.

சரி—கைவளை, வழி. உ. சராவம்—அகல், சலாகை. உ.
கரியவன்—சனி, திருமால், இந்திரன். ஈ.
பரிகம்—அகழி, மதிலுண்மேடை, மதில், எழு [வளைதடி.] ச.
கரில்—குற்றம், உறைத்தல். உ. காதை—சொல், கதை. உ.

மூரி—எருது, எருமை, வலிமை, பழமை, பெருமை, நெரிவு. சா.
வாரி—நீர், கதவு, வெள்ளம், மதில், கடல், வருவாய், வழி. எ.
நாரி—பன்னாடை, பெண், கள், வின்னாணி. ச. பாரி—கடைவள்ள
லெழுவரிலொருவன்,கட்டில்,மனைவி,கள்,நல்லாடை,கடல். சா.
ரு.

அருகலேசருங்கல்சார்தலமுதமேசுவைநீர்மோக்கம்
பொருளேசொற்பொருள்பல்பண்டம்பொன்பண்புபின்லைவாய்மை
குருநிறமோர்நோய்தேயங்குரவன்பாரம்வியாழன்
அருணமென்பதுமான்செம்மையாடெலுமிச்சைநாற்பேர். (கக)

முருகுகள்ளிளமைநாற்றமுருகவேள்விழாவனப்பாம
மருமானேமருமகன்பேர்வழித்தோன்றற்பேருமாமே
இருசுபண்டிபுளிரும்புசெவ்வையென்றிருபேரென்ப
சருமையேபெருமையாகுங்கருப்பொருவலியுமாமே. (கஉ)

கருத்திமந்தோலேபண்ணல்கெட்டபொய்விட்டபூதம்
விருத்தியேதொழிலாயம்விரிபொருள்வளர்ச்சிக்கும்போ
தருத்தியாற்றிடைக்குறைப்போதோலுமாந்துட்டைக்கும்பேர்
அரத்தமேயிரத்தஞ்செம்மையரக்கொடுற்பலங்கடம்ப. (கங)

சீர்செல்வந்தாளவொத்துச்சீர்த்திகாதண்டேபாரம்
தார்கொடிப்படைபூத்தண்டுதாமங்கிங்கிணியின்கோவை
கூறென்பநோயேயச்சமஞ்சாமையணங்குஞ்சொல்லும்
கார்நீர்வெள்ளாடுமேகங்கருப்பிருண்மாரிக்காலம். (கச)

ஆர்கூர்மையாத்திதேரினகத்துருகதிருமாகும்
பீரென்பமுலையிறபாலும்பீர்க்கொடுபசலைக்கும்பேர்
வாரென்பநெடுமைகச்சுமன்னுநீர்நேர்மைநாற்பே
ரோர்சமமீதல்பாதிநெடிலுடன்பாடுதுட்பம். (கரு

அருணன்சூரியன்றேர்ப்பாகனுதித்தன்புதன்முப்பேரே
வருணமேகுலநீராகுமகனென்பசிறந்தோன்மைந்தன்
தரணிபாரிரவிவெற்பாந்தையல்பெண்ணழகுமாகும்
கரிணியேமுழையும்வெற்புங்களிற்றின்பிடியுங்காட்டும். (கசு

மாரியேவிளிவுகள்ளுவடுநோய்மேகமைம்பேர்
ஓரியாண்மயிரோர்வள்ளன்முதுநரிமுசுவென்றோதும
காரியோர்வள்ளலையன்கடுச்சனிவடுகன்காக்கை
சூரியமிடபமாடைதுந்துபியெழுதுங்கோலே. (கஎ

பிரமமேவேதம்வேள்விமந்திரம்பிரமன்மாலோ
டிரவிதீமுனிவர்முத்திபீசனம்புலிபன்னொன்றே
அரசனேவியாழன்மன்னுமம்பணந்தோணியாமை
குரல்கதிர்சிறகுமாதர்கூந்தல்யாழ்நரம்புநாற்பேர். (கஅ

அருகலென்பது-குறைதல்,கிட்டல். உ. அமுதம்-அமிர்தம்,நீர்,மோக்ஷம். ங. பொருள்-சொற்பொருள்,பலபண்டம்,பொன்,குணம்,மகன்,உண்மை. சு. குரு-நிறம்,ஒருவியாதி,ஒருதேசம்,ஆசான்,பாரம்,வியாழன். சு. அருணம்-மான்*சிவப்பு,ஆடு,எலுமிச்சை. ச.

முருகு—கள், இளமை, வாசனை, முருகன், திருவிழா, அழகு. சு.
மருமான்—மருகன், வழித்தோன்றல். உ.
இருசு—பண்டியுளிரும்பு, செவ்வை. உ.
கருமை—பெருமை, கறுப்பு, வலிமை. ங.

கிருத்திமம்—தோல், செய்தல், பொய், பூதகணம். ச.
விருத்தி—தொழில், இலாபம், விரிவுரை, வளாதல். ச.
துருத்தி—ஆற்றிடைக்குறை, தோல், தொழுதகை. ங.
அரததம்—இரததம்,சிவப்பு,அரக்கு,செங்குவளை,கடப்பமரம். ரு.

சீர்—செல்வம்,தாளவொத்து,மிகுபுகழ்,[புகழ்],தூக்கு,தண்டு,பாரம். சு. தார்—கொடிப்படை,மலர்,சேனை,பூமாலை,கிங்கிணிமாலை.
சூர்—வியாதி, அச்சம், அஞ்சாமை, தெய்வபபெண். ச.
கார்—நீர், வெள்ளாடு, மேகம், கருமை, இருள், கார்காலம். சு.

ஆர்—கூர்மை, ஆததிமரம், தேரினகத்திற்செறிகதிர். ங.
பீர்—முலைப்பால், பீர்க்கு, பசலை. ங.
வார்—நீளம், கச்சு, நீர், நேர்மை. ச.
நேர்—ஒப்பு, கொடுத்தல், பாதி, நீளம், உடன்பாடு, நுட்பம். சு.

அருணன்—சூரியன்றேர்ப்பாகன், சூரியன், புதன். ங.
வருணம்—குலம், நீர். உ. மகன்—சிறப்புற்றோன், புததிரன. உ.
தரணி—பூமி, சூரியன், மலை. ங. தையல்—பெண், அழகு. உ.
கரிணி—மலைமுழை, மலை, ஆண்யானை, பெண்யானை. ச.

மாரி-சாவு,கள்,காடுகாள்,வியாதி,மேகம்.ரு ஓரி-ஆண்மயிர்,கடைவள்ளலெழுவரிலொருவன,†கிழநரி,ஆண்முசு.ச.காரி-முதல்வள்ளலெழுவரிலொருவன்,ஐயனார்,நஞ்சு,சனி,வைரவக்கடவுள்,காகம்.
தூரியம்—எருது, வஸ்திரம், வாச்சியப்பொது, எழுதுகோல். ச.

பிரமம்—வேதம், யாகம், மந்திரம், பிரமன், திருமால், சூரியன், நெருப்பு, இருடிகள், மோக்ஷம், சிவன், சந்திரன். கக.
அரசன்—வியாழன்,இராசன். உ. அம்பணம்—தோணி,ஆமை. உ.
குரல்—கதிர், இறகு, பெண்மயிர், யாழ்நரம்பு. ச.

* அரிணம் - மான். † ஓரி - நரிக்கும்பெயர்.

தோரைநெல்விகற்பமூங்கிலரிசிகைவரைசொன்முப்பேர்
ஆரையேமதில்புற்பாயாமகலுளேபரப்பூர்நாடே
ஓரையேமாதர்கூடிவிளையாடலுடனிராசி
தாரைகண்மழைநேரோடொழுங்கைவழியேகூர்மை. (௧௯

ஊர்திதேர்விமானம்பாண்டிலும்பலேசிவிகைபாய்மா
ஆர்வமேநீர்நரகமன்பாமகலமாபொடுவிசாலம்
ஆர்வலர்கொண்கன்பரனுமென்பதுயிர்நண்மைப்பேர்
ஆதலேநிறைதலுண்டலகளந்தான்மிடாநற்றாழி. (௨௦

பாரமேகவசநதோணிபல்லணம்பொறையினோடு
நீருறுகரைவன்பாரநிறைதரைநிகழ்த்துமெண்பேர்
சூரனேயிரவிதீநாயதுகளென்பகுறறநூளாம
சாரங்கமானும்வண்டுஞ்சாதகப்புள்ளுமாமே. (௨௧

ஆரல்கார்த்திகைநாள்செவ்வாயரணுறுப்பொருமீனாறுபேர்
சாரலேமருதயாழினிசையொடுசைலப்பக்கம்
மூரலேநகைபல்சோறுமுரம்பென்பமேடுபாறை
கூரல்புட்சிறகுமாதரோதியுமிருபேர்கூறும். (௨௨

சாரிகைபூவைசுங்கஞ்சுழல்காற்றுத்தானுமாகும்
காரிகையழகுபெண்ணேகலித்துறையோடாறாகும்போ
வாரணங்கவசங்கோழிதடைசங்குவாரிகைம்மா
பூருவமுதுமைமுன்புகிழக்கென்றும்புகலலாமே. (௨௩

ஏரழகுழுபெற்றப்பேரிராசிதானேரைகூட்டம்
பாருலகநதேர்ப்பாராம்பயல்பளளம்பாதிசிறருள்
போரமர்சதயததோடுபுகலுநென்முதலாஞ்சுமமை
பீருவேயச்சமுள்ளோன்பெயரொடுபுருவமாமே. (௨௪

அருப்பமாரிடநோய்காடாமரணுடனூருமப்பேர்
மரக்காலாயிலியஞ்சோதிமாயவனுடன்முப்பேர்
நிரப்பென்பமிடிநிறைப்பேர்நிறையழியாமைநீர்ச்சால்
துருக்கமேயரண்கதூரிகுங்குமமரமுஞ்சொல்லும். (௨௫

குருதியேசிவப்பிரத்தங்குசனெனக்கூறுமுப்பேர்
பரிதியேயூர்கோள்வட்டம்பாற்கரனேமிநாற்பேர்
சுருதியேயொலிவேதப்பேர்சுரமருநெறிகான்மார்க்கம்
இரதிபித்தளைபெண்யானைமதன்றேவியிச்சைநாற்பேர். (௨௬

தோரையென்பது—ஒருவகைநெல், வேயரிசி, கையிறை. ௩.
ஆரை—மதில், புற்பாய். ௨. அகலுள்—அகலம், ஊர், நாடு. ௩.
ஓரை—மகளிர்விளையாட்டு, இராசி. ௨.
தாரை—கண், மழை, நேரோடல், நக்ஷத்திரம், வழி, கூர்மை. ௬.

ஊர்தி—தேர், விமானம், பண்டி, யானை, தண்டிகை, குதிரை. ௬.
ஆர்வம்—ஒருநரகம், அன்பு. ௨. அகலம்—மார்பு, விரிவு. ௨.
ஆர்வலர்—நாயகர், அன்புடையோர். ௨. அணு—ஆன்மா, நுட்பம்.
ஆர்தல்—நிறைதல், புசித்தல். ௨. அகளம்—மிடா, சாடி. ௨.

பாரம்—கவசம், தோணி, குதிரைக்கலணை, பொறுத்தல், நீர்க்கரை, கனம், ஒருநிறை, பூமி. ௮.
சூரன்—சூரியன், நெருப்பு, நாய். ௩. துகள்—குற்றம், புழுதி. ௨.
சாரங்கம—மான், வண்டு, சாதகப்பட்சி. ௩.

ஆரல்—கார்த்திகைநக்ஷத்திரம், செவ்வாய், மதில், ஆரான்மீன். ௪.
சாரல்—மருதயாழிஞ்ஞேரிசை, மலைப்பக்கம். ௨.
மூரல்—சிரிப்பு, பல், சோறு. ௩. முரம்பு—மேடு, பாறை. ௨.
கூரல்—பறவையினிறகு, பெண்மயிர். ௨.

சாரிகை—நாகணவாய்ப்புள், சுங்கவிறை, சுழல்காற்று. ௩.
காரிகை—அழகு, பெண், கலித்துறை, ஒருநூல். ௪.
வாரணம்—கவசம, கோழி, தடுத்தல், சங்கு, கடல், யானை. ௬.
பூருவம்—பழமை, முன்பு, கீழ்த்திசை. ௩.

ஏர்—அழகு, உழுமெருது. ௨. இராசி-மேடமுதலியராசி, கூட்டம்.
பார்—பூமி, தேர்ப்பலகைப்பா. ௨. பயல்-பள்ளம், பாதி, சிறுபிள்ளை.
போர்—யுத்தம், சதயநக்ஷத்திரம், நெற்போர்முதலியன. ௩.
பீரு—அச்சமுள்ளோன், புருவம. ௨.

அரும்பம்—வழுக்குநிலம், வியாதி, காடு, கோட்டை, ஊர். ௫.
மரக்கால்-ஆயிலியநக்ஷத்திரம், சோதிநக்ஷத்திரம், திருமால்கூத்து.
நிரப்பு—தரித்திரம், நிறைவு ௨. நிறை—அழிவின்மை, நீர்ச்சால். ௨.
துருக்கம்—மதில், கத்தூரி, குங்குமமரம். ௩.

குருதி—சிவப்பு, இரத்தம், செவ்வாய். ௩.
பரிதி—பரிவேடம், வட்டம், சூரியன், சக்கராயுதம். ௪.
சுருதி—ஒலி, வேதம். ௨. சுரம்—அரியவழி, காடு, வழி. ௩.
இரதி—பித்தளை, பெண்யானை, மன்மதன்மனைவி, ஆசை. ௪.

புரைசுற்றமுவமையில்லம்புழையுயர்ச்சியுமைம்பேரே
விரைமணஞ்சாந்துதூபம்வீரைதான்றுயரம்வாரி
நரைவெள்ளையிவுளிவெண்மைநந்திநற்சவரிநாரை
சுரைகள்ளான்முலைதுளைப்பேர்தூறும்பலேதிமிறலுள்ளல். (௨௭)

மருளொன்பகுறிஞ்சியாழின்றிறத்தொடுமயக்கமும்பேர்
இருளொருநரகமையலிருளொடுகருமையென்ப
பொருநர்போர்த்தலைவர்கூத்தர்புரவலர்பாணர்வீரர்
இருபிறப்பெயிறும்பார்ப்புமிந்துவும்புள்ளுமாமே. (௨௮)

மருதமேபொருமரஞ்செய்மருதமந்நிலப்பாடற்பேர்
எருவையேகொறுக்கைகோரைகழுகுசெம்பிரதசமென்ப
தருமராசன்முன்புத்தன்சண்டனேடருகன்றானும்
கரியென்பதிருந்தைசான்றுகறையடிசேருநாற்பேர். (௨௯)

கருவிபல்லியந்துணைக்காரணங்கள்யாழ்கவசமீட்டம்
பொருபடைக்கலந்தொடர்ச்சிபுயல்பலவினைப்பேர்கூட்டம்
பரியின்பல்லணைமேயாடைகசைபதின்முப்பேர்பன்னும்
சுரிகைபேகவசம்வாளாந்துவைபிண்ணாக்கிறைச்சியோசை. (௩0)

குருகுபுள்ளிளமைநாரைகொல்லுலைமூக்குக்கோழி
சரிவெள்ளைமூலநாள்வாசந்தியொன்பான்பேர்சாற்றும்
முரசேயுத்தரட்டாதிப்பேரியமென்றுமொழியலாமே
தரளமேயுருட்சிமுத்தாஞ்சார்வென்பதிடமும்பற்றும். (௩௧

முரண்வலிபகையாமென்பமொய்ம்புதோள்வலியுமாகும்
உரையென்பகிளவிதேய்வாமுவாத்தந்தியிளையோன்பௌவம்
ஞெரேலொலிவிரைவுமாகுநிதியிருநிதிபொன்னென்ப
உருநிறம்வடிவட்டைப்பேரோதனஞ்சோறேயுண்டி. (௩௨

அரிகிளிபுணரிமாறேரைம்மையிந்திரன்கால்காந்தி
பரிபுகர்பன்றிசிங்கம்பகைபுகைபாயல்சோலை
வரிமதிசேருதேரைவானரமியமன்மூங்கில்
எரிபுரைநிறம்பொன்பாந்தளிரவிகண்வரிதார்பச்சை. (௩௩

அரிசிநெற்கதிர்கள்கூர்மையளிபடைக்கலமேயீர்வாள்
அரிதலேசயனநேமியடல்விசிபறையரித்தல்
பரிபுரமதனுட்பெய்தபரலோடிவ்வாறேழைந்தாம்
அரிதமேபசுமைதிக்காமார்ப்பொலிசிரித்தற்பேரே. (௩௪

புரையென்பது—குற்றம், ஒப்பு, வீடு, உட்டுளை, உயர்ச்சி. ௫.
விரை-வாசனை, கலவைச்சாந்து, நறும்புகை. ௩. வீரை-துன்பம், கடல்
நரை—வெள்ளைக்குதிரை, வெண்மை, இடபம், சாமரம், நாரை. ௫.
சுரை-கள், பசுவின்முலை, உட்டுளை. ௩. துரும்பல்-திமிறல். துள்ளல்.

மருள்—குறிஞ்சியாழ்த்திறம், மயக்கம். ௨.
இருள்—ஒருநரகம், மயக்கம், இருள், கறுப்பு. ௪.
பொருநர்—படைத்தலைவர், நாடகர், அரசர், பாணர், வீரர். ௫.
இருபிறப்பு—பல், பிராமணர், சந்திரன், பறவை. ௪.

மருதம்—ஒருமரம், வயல், மருதநிலம், மருதநிலப்பாடல். ௪.
எருவை—கொறுக்கைப்புல், கோரை, கழுகு, செம்பு, இரத்தம். ௫.
தருமராசன்—புத்தன், யமன், அருகன். ௩.
கரி—கரி, சாட்சி, யானை, மரவயிரம். ௪.

கருவி—வாச்சியம், உபகரணம், யாழ், கவசம், கூட்டம், ஆயுதப்
பொது, தொடர்பு, மேகம், செயற்கைவடிவபொருள், சினேகம்,
குதிரைக்கலணை, வஸ்திரம், குதிரைச்சம்மட்டி. ௧௩.
சரிகை—கவசம், உடைவாள். ௨. துவை—பிண்ணாக்கு, தசை, ஒலி.

குருகு—பறவைப்பொது, இளமை, நாரை, கொல்லனுலைமூக்கு,
கோழி, கைவளை, வெண்மை, மூலநக்ஷத்திரம், குருக்கத்தி. ௯.
முரசு—உத்தரட்டாதிநக்ஷத்திரம், வாச்சியபொது. ௨.
தாளம்—உருட்சி, முத்து. ௨. சார்வு—இடம், பற்று. ௨.

முரண்—வலிமை, பகை. ௨. மொய்ம்பு—புயம், வலிமை. ௨.
உரை—சொல், தேய்தல். ௨. உவா—யானை, இளையோன், பூரணை.
ஞெமிரல்—ஒலிக்குறிப்பு, விரைவுக்குறிப்பு. ௨. நிதி—சங்கநிதி,
பதுமநிதி, பொன். ௩.
உரு—நிறம், வடிவு, அட்டை. ௩. ஓதனம்—சோறு, உணவு. ௨.

அரி—கிளி, கடல், திருமால், தேர், தகடு, இந்திரன், காற்று, ஒளி,
குதிரை, குற்றம், பன்றி, சிங்கம், பகை, புகை, பாயல், சோலை,
வரி, சந்திரன், மரவயிரம், தவளை, குரங்கு, யமன், மூங்கில், நெருப்பு,
உட்டுளை, நிறம், பொன், பாம்பு, சூரியன், கண்வரி, பூமாலை, பச்சை,

அரிசி, நெற்கதிர், கள், கூர்மை, வண்டு, ஆயுதம், அரிவாள், அரி
தல், சயனம், சக்கராயுதம், வலிமை, விசிபலகை, பறை, அரித்
தல், சிலம்பினுட்பருக்கைக்கல். ௪௫. (ஆ ௪௭.)
அரிதம்—பச்சைநிறம், திக்கு. ௨. ஆர்ப்பு—ஒலி, நகைப்பு. ௨.

அருவியேமலைச்சார்வாறுமரிதினைத்தாளுமாகும்
அரலையேகனி * வித்தாழிமரல்கழலையுமாமென்ப
கரடமேமதம்பாய்கின்றசுவட்டொடுகொக்கையாகும்
சுரியருன்பெண்மயிர்க்கேசொல்லுமாண்மயிர்க்கும்பேராம். (௩௫)

திருவென்பகமலைசெல்வஞ்சிறப்பொடுமுப்பேர்செப்பும்
பரிவென்பதுன்பமின்பம்பகருமன்பிற்குமப்பேர்
கரையேநீர்க்கரைசேர்வாருங்கைத்துநீணிதிவெறுப்பாம்
சுரகுருமகவான்றேவமந்திரியிருபேர்சொல்லும். (௩௬)

அரற்றலேயழுகையோசையைதென்பவிரைவுநொய்தாம்
இரத்தஞ்செந்நீர்சிவப்பாமிலாங்கலியலந்தென்காந்தள்
அரக்கென்பமெழுகுகள்ளின்விகற்பமுஞ்சிவப்புமாகும்
அருச்சுனமருதுவெண்மையறிக்கைதானறிவுபற்றும். (௩௭)

அரந்தையென்பதுகுறிஞ்சியாழிசைதுன்பமாகும்
அருந்தலேயருமையுண்டலளித்தருன்கொடுத்தல்காத்தல்
அரங்கமாற்றிடைக்குறைப்பேராடிடஞ்சபையுமப்பேர்
அரங்குபோரிடம்வட்டாடுமிடஞ்சபைமனைவிகற்பாம். (௩௮)

முருந்தென்பமயிலின்றோகைமுதன்முள்ளுத்தவளமாகும்
விருந்தமேகிளையின்கூட்டம்விலங்கின்கூட்டமுமென்றாகும்
குரங்குவானரம்விலங்கின்பொதுமிகுகோணலாகும்
எருந்துரல்கிளிஞ்சிலென்பரிடஞ்செல்வம்விசாலம்வாமம். (௩௯)

ஆரியர்மிலேச்சர்நல்லோராரெனென்பதிடைச்சொலாவாம்
ஆரியேகதவுசோழனழகொடுமேன்மைக்கும்பேர்
காருகர்தந்துவாயர்கடுங்கொலையாளர்வண்ணார்
தாரகாரியென்பகாளிசண்முகன்றானுமாமே. (௪௦)

சார்கூடலொருதாருப்பேர்சான்றோன்மான்றலைநாள்பானு
வேரென்பமரவேரவேர்வாம்விழைச்சுநல்லிளமைபோகம்
பாராவாரந்தான்வாரிகடற்கரையிருபேர்பன்னும்
சாரணரொற்றரென்பசமண்முனிவர்க்கும்பேராம். (௪௧)

அராகஞ்செந்நிறமேபாலையாழ்முடுகியற்பாட்டாசை
கரேணுவேபிடியானைக்குங்கடுங்கொலையானைக்கும்பேர்
கிராணமேகிராணமூக்காங்கிளர்சிறுவட்டிலும்பேர்
கரீரமேயிடாவகத்திகரியின்பல்லடிமுளைப்பேர். (௪௨)

ரகரவெதுகை முற்றிற்று.

ஆ. விருத்தம் - ௨௦௬.

---

* கன்னி - கனியெனவிகாரமாயிற்று.

அருவியென்பது—மலைச்சாரலாறு, இனைத்தாள். உ.
அரலை—துர்க்கை, விதை, கடல், மரச்செடி, கழலை. ரு.
கரடம்—மதம்பாய்சுவடு, காகம். உ.
சுரியல்—பெண்மயிர், ஆண்மயிர். உ.

திரு—திருமகள், செல்வம், சிறப்பு. ங.
பரிவு—துன்பம், இன்பம், அன்பு. ங.
கரை—நீர்க்கரை, இடம். உ. கைதது—பொன், வெறுப்பு. உ.
சுரகுரு—இநதிரன, வியாழன். உ.

அரற்றல்—அழுதல், ஒலி. உ. ஐது—சீக்கிரம், நொய்மை. உ.
இரத்தம்—உதிரம்,சிவப்பு. உ. இலாஙகலி-கலப்பை,தெனனமரம, செஙகாநதள். ங. அரகரு—மெழுகு,கள்ளின்விகறபம,சிவப்பு.
அருச்சுனம்—மருதமரம்,வெண்மை. உ. அறிகை—அறிவு,பற்று.

அரந்தை—குறிஞ்சியாழிசை. துன்பம். உ.
அருந்தல—அருமை, உண்டல். உ. அளிததல்-கொடுததல்,காததல்.
அரஙகம்—ஆறறிடைக்குறை,நாடகசாலை,சபை.ங.அரஙகு—போர்க்களம், வட்டாடுமிடம், சபை, மனையின்விகறபம. ச.

முருநது—மயிலிறகினடிமுள், வெண்மை. உ.
விருந்தம்—சுற்றததின்கூட்டம், விலஙகின்கூட்டம். உ.
குரஙகு—குரஙகு, விலஙகின்பொது, வளைவு. ங.
எருந்து-உரல்,கிளிஞ்சில் உ.இடம்-செல்வம்,விசாலம்,இடப்பக்கம்.

ஆரியர்—மிலேச்சர், நல்லோர். உ. ஆன்—இடைச்சொல், பசு. உ.
* ஆரி—கதவு, சோழன, அழகு, மேன்மை. ச.
காருகர்—நெய்வோர், கொலையாளா, வண்ணா. ங.
தாரகாரி—காளி, முருகக்கடவுள். உ.

சார்—கூடுதல்,ஒருமரம். உ. சான்றோன்—மிருகசீரிடநக்ஷத்திரம், சூரியன். உ.
வேர்—மரவேர், வேர்வை. உ. விழைசசு—இளமை, புணாச்சி. உ.
பாராவாரம்-கடல்,கடற்கரை.உ. சாரணா-ஒறறா,சமணவிருடிகள்.

அராகம்—செந்நிறம்,பாலையாழ்த்திறம்,முடுகியறபாட்டு,ஆசை. ச.
கரேணு—பெண்யானை, ஆண்யானை. உ.
கிராணம்—கிரகணம், மூக்கு, சிறுவட்டில். ங.
கரீரம்—மிடா, அகததிமரம், யானைபபல்லடி, முளை. ச.

---

* அாரி - கதவ.

# லகரவெதுகை.

புலவர்பாடுநரேகூத்தர்புதனும்பர்கவிகளோவர்
வலவனேவெற்றியாளன்மருவுந்தேர்ப்பாகன்மாயோன்
அலகுநெற்கதிரேயாதிபலகறைநுளம்பெண்ணேதி
அலரிகண்வரியருக்கனழகொருமரம்பூவாமே. (௧)

ஆலமேவிடவிருக்கமடுநஞ்சோடலர்பூநீராம்
மூலம்வேர்முதலேயேதுமுதிர்வுறுகிழங்கோர்நாளாம்
சீரமேருணைநதண்டிததறிகழசரிதகிரமுப்பேரே
சாலமேவலைசாலேகமாமரஞ்சபைமதிற்பேர். (௨)

காலம்வைகறைகாலப்பேர்கலமலம்யாழ்பூணுவாய்
சாலகங்காலதர்ப்பேர்தானேபூமொட்டுமாகும்
தாலமுண்கலமேநாவேதராதலம்பனையேநாற்போ
ஆலலாடுதலொலிப்போறுவைசித்திரைநாளாடை. (௩)

இலம்பகமத்தியாயநுதறசூட்டென்றிருபேராமே
இலஞ்சிமாவாவிகொப்பூழெயில்குணமகிழேடேரி
பலங்கனிபயன்காயசேனைபலங்கிழங்கறுபேராகும்
அலங்கலென்பதுபூமாலைபசைவொடுதளிரிலங்கல. (௪)

ஒலியென்பதிடியேகாற்றேயோசையென்றுரைமுப்பேர்
ஒலியலேயாறுந்தோலுமுடுத்தவாடையும்பைந்தாரும
கலுழியேகான்யாறென்பகலங்கியநீருமாமே
கலைமதிப்பங்குதூசுகல்விநூலிரலைகாஞ்சி. (௫)

பீலியேயாலவட்டம்பெருவரைகலாபிதோகை
பாலிகையதுவெட்டம்படைவாளினமுட்டியும்போ
வேலியூர்மதில்காவற்பேர்மெத்தைமெல்லணையேசட்டை
தோலிபம்வனப்புவார்த்தைதுருத்திதோற்பலகையைப்போ. (௬)

பாலையோர்மரநிலம்மந்நிலத்தினிற்பாடலும்பேர்
வேலையேகடலதற்றுமேவியகரையேகாலம்
மாலையேயிரவோடந்திமாலிகையொழுங்குநாற்போ
சாலையேகுதிரைபந்தியறப்புறந்தானுமாமே. (௭)

அல்லிவெள்ளாம்பல்காயாவகவிதழாகமுப்பேர்
அல்லிராவிருளேயென்பவாகமார்புடலுமாமே
இல்லியேவட்டங்கீரைதேருருள்சிள்வீடென்ப
வல்லியாய்ப்பாடிவள்ளிவரைவொடுநிகளமாமே. (௮)

# லகரவெதுகை கூ

புலவரென்பது-பாடுவோர், கூத்தர், புதன், தேவர், பண்டிதர், கம்மாளர். கூ. வலவன்—வெற்றியாளன், தேர்ப்பாகன், திருமால். ௩.
அலகு—நெற்கதிர்முதலியன, பலகறை, நுளம்பு, இலக்கம், ஆயுதம்.
அலரி—கண்வரி, சூரியன், அழகு, ஒருமரம், பூ. ௫.

ஆலம்—ஆலமரம், நஞ்சு, மலர்ந்தபூ, நீர். ச.
மூலம்—வேர், முதல், காரணம், கிழங்கு, ஒருநக்ஷத்திரம். ௫.
சீலம்—குணம், தண்டித்தல், சரித்திரம். ௩.
சாலம்—வலை, பலகணி, ஆச்சாமரம், கூட்டம், மதில். ௫.

காலம்—விடியற்காலம், பொழுது. ௨.
கலம்—கலப்பை, யாழ், ஆபரணம், மரக்கலம். ச.
சாலகம்—பலகணி, பூவரும்பு. ௨. தாலம்-உண்கலம், நா, பூமி, பனை.
ஆலல்—ஆடுதல், ஒலி. ௨. அறுவை-சித்திரைநக்ஷத்திரம், வஸ்திரம்.

இலம்பகம்—அத்தியாயம், நுதலணிமாலை. ௨.
இலஞ்சி—மாமரம், வாவி, கொப்பூழ், மதில், குணம், மகிழமரம், ஏரி.
பலம்—பழம், பயன், காய், சேனை, வலிமை, கிழங்கு. கூ.
அலங்கல்—பூமாலை, அசைதல், தளிர், ஒளிசெய்தல். ச.

ஒலி—இடி, காற்று, ஓசை. ௩.
ஒலியல்—நதி, தோல், வஸ்திரம், பூமாலை. ச.
கலுழி—கான்யாறு, கலங்கனீர். ௨.
கலை—மதியின்பங்கு, சீலை, கல்வி, நூல், கலைமான், மேகலை. கூ.

பீலி—சிற்றுலவட்டம், மலை, மயில், மயிற்றோகை. ச.
பாலிகை—உதடு, வட்டம், படைவாளின்முட்டி. ௩. வேலி—ஊர், மதில், காவல். ௩. மெத்தை—அமளி, சட்டை. ௨. தோல்—யானை,
* எண்வகைவனப்பிலொன்று, சொல், துருத்தி, தோற்பலகை. ௫.

பாலை—ஒருமரம், ஒருநிலம், பாலைநிலப்பாடல். ௩.
வேலை—கடல், கடற்கரை, காலம். ௩.
மாலை—இரா, அந்திப்பொழுது, மாலை, ஒழுங்கு. ச.
சாலை—குதிரைப்பந்தி, அறச்சாலை. ௨.

அல்லி—வெள்ளாம்பல், காயாமரம், அகவிதழ். ௩.
அல்—இரா, இருள். ௨. ஆகம்—மார்பு, உடம்பு. ௨.
சில்லி—வட்டம், சிறுகீரை, தேருருள், சிள்ளீடு. ச.
வல்லி—இடைச்சேரி, படர்கொடி, அளவு, கால்விலங்கு. ச.

* எண்வகைவனப்பு: "அம்மையழகுதொன்மைதோல்விருந்-தியைபுபுலனிழைபெனவனப் பெட்டே," என்னுஞ் சூத்திரத்தாலறிக.

இல்லில்லாளில்லையென்றலிராசிசாவிடம்வீடாறே
மல்வளம்வலியினோடுமாயவனுடன்முப்பேர்
சில்லையென்பதுபிரண்டைசிள்வீடுதூர்த்தைக்கும்பேர்
ஒல்லையேவிரைவுதொல்லைகடுப்புடன்சிறுபோதாமே. (௯)

வில்லென்பமூலநாளாம்வெஞ்சிலையொளியுமப்பேர்
வல்வலிவிரைவுசூதாமலர்தலேயெதிர்தலென்றல்
புல்புலிபுணர்ச்சிப்புன்மைபுதல்பனையனுடநாளாம்
கொல்லென்பதசைச்சொலையங்கொலையேவல்வருத்தநாற்பேர். (௧௦)

மால்புதன்பெருமைமேகமாயவன்மயக்கங்காற்றே
ஆலோடலிரண்டுசொல்லுமாமென்பதல்லவும்பேர்
வால்வெண்மைமிகுதிதூயதாம்வசந்தனேதென்றல்காமன்
சால்புமாட்சிமைசான்றாண்மைசாற்றியவிருபேர்தானே. (௧௧)

வலம்புரிசங்குநந்தியாவர்த்தமோர்மரமுப்பேரே
புலம்பொலிதனிமையச்சம்பொய்யென்பபொக்கம்பொந்தாம்
சிலம்பொலிஞெகிழிகுன்றஞ்செருந்திபஞ்சரம்வாட்கோரை
விலங்குகாற்றளைகுறுக்குமிருகததின்பொதுவுமாமே. (௧௨)

உலகமேதிசைவெண்பூமியுயர்குணஞ்சனமுயர்ந்தோர்
அலவனேஞெண்டுபூனையம்புலிகடகராசி
இலயமேகூத்துங்கூத்தின்விகற்பமுமிருபேரென்ப
வலவைவஞ்சப்பெண்வல்லோன்வருடைதான்சிம்புளாடாம். (௧௩)

கலாபமேமணிவடம்மேகலைமயிலிறகுமுப்பேர்
சிலீமுகமுலைக்கண்வண்டுசித்திரபுங்கந்தானும்
சலாகைநன்மணிநாராசஞ்சவளமுமாகுமென்ப
விலோதம்பெண்மயிர்பதாகைவிடமென்பநஞ்சுந்தேனும். (௧௪)

செல்லிடியேவன்மேகஞ்சிதலையுமாகுமென்ப
எல்லொளிபகலிகழ்ச்சியிரவுடனிரவியைம்பேர்
சொல்லுரைகீர்த்திநெல்லாந்தொடுத்தலேவளைத்தல்கட்டல்
கல்லொலிமலைகல்லென்பகரண்டநீர்க்காக்கைசெப்பாம். (௧௫)

கலிவஞ்சமொலியேசனிகடையுகம்வலியைம்பேரே
சிலையொலிமலைகல்வில்லாஞ்செடியொளிசெறிவுதீதாம்
தலமென்பதிலைபுவிப்பேர்தலையிடந்தலைவின்றூதி
திலமேமஞ்சாடியெள்ளாந்திலகமஞ்சாடிபொட்டாம். (௧௬)

இல்லென்பது—மனைவி, இல்லையெனல், இராசி, சா, இடம், வீடு. ௬.
மல்—வளம், வலிமை, திருமால்கூத்து. ௩.
சில்லை—பிரண்டை, சிள்வண்டு, தூர்த்தை. ௩.
ஒல்லை—காலவிரைவு, பழமை, வேகம், சிறுபொழுது. ௪.

வில்—மூலநக்ஷத்திரம், வில், ஒளி. ௩. வல்—வலிமை, சீக்கிரம், சூதாடுகருவி. ௩. மலர்தல்—எதிர்தல், தோன்றல். ௨.
புல்—புலி, கலவி, அற்பம், புல், பனை, அனுடநக்ஷத்திரம். ௬.
கொல்—அசைச்சொல், ஐயம, கொல்லெனேவல், வருத்தம். ௪.

மால்—புதன், பெருமை, மேகம், திருமால், மயக்கம, காற்று. ௬.
ஆல்—ஆமெனல். ௧. அல்—அலலவெனல. ௧.
வால்—வெண்மை, மிகுதி, சுத்தம. ௩. வசந்தன—தென்றல், மன்மதன். ௨. சால்பு—மாட்சிமை, சாலபுடைமை. ௨.

வலம்புரி—சங்கு, நந்தியாவர்த்தம், ஒருமரம. ௩. புலம்பு—ஒலி, தனிமை, பயம். ௩. பொய—அசத்தியம, மரப்பொந்து. ௨. சிலம்பு—ஒலி, சிலம்பு, மலை. ௩. செருந்தி—செருந்திமரம, வாட்கோரை. ௨.
விலங்கு—கால்விலங்கு, குறுக்கு, மிருகத்தினபொது. ௩.

உலகம்—திக்கு, ஆகாயம், பூமி, உயர்குணம், சனம, உயர்ந்தோர். ௬.
அலவன்—நண்டு, பூனை, சந்திரன, கடகராசி. ௪.
இலம்ப—கூத்து, கூத்தினவேறுபாடு. ௨. வலவை—காளியேவற பெண், வல்லவன. ௨. வருடை—எணகாறபுள, ஆடு. ௨.

கலாபம்—மணிவடம், பதினறுகோவைமணி, மயிலிறகு. ௩.
சிலீமுகம்—முலைக்கண், வண்டு, அம்பு. ௩.
சலாகை—தெய்வவகனமணி, சலாகை, சவளம். ௩.
விலோதம்—கூந்தல், பெருங்கொடி. ௨. விடம—நஞ்சு, *தேள. ௨.

செல்—இடி, செல்லெனேவல், மேகம், கறையான். ௪.
எல்—பிரகாசம், பகல, இகழச்சி, இரா, சூரியன. ௫.
சொல்—வார்த்தை, புகழ், நெல. ௩. தொடுத்தல்-வளைத்தல், கட்டல.
கல்—ஒலிக்குறிப்பு, மலை, கல். ௩. கரண்டம—†நீர்க்காக்கை, செப்பு.

கலி—வஞ்சனை, ஒலி, கடல், கடையுகம், வலிமை. ௫.
சிலை—ஒலி, மலை, கல், வில். ௪. செடி—பிரகாசம், நெருக்கம், தீமை.
தலம்—இலை, பூமி. ௨. தலை—இடம், சிரசு, ஆகாயம், முதல். ௪.
திலம்—மஞ்சாடிமரம், எள்ளு. ௨. திலகம்—மஞ்சாடிமரம, பொட்டு.

---

* நளிவிடம் - தேள். † காரண்டம் - நீர்க்காக்கை.

வல்லைகான்விரைவுமைந்தாம்வடமணிவடமாரும்பு
பல்லமோர்கணக்குப்பாணம்பல்லணங்கரடிநாற்பேர்
மல்லலேவலிவளப்பேர்வாயிலைம்புலன்கடைப்பேர்
முல்லைமல்லிகையேவென்றிமுல்லைநன்னிலங்கற்பாமே. (கஎ)

கோலென்பதிட்டிவாட்கோறுகிலிகைதுலாஞ்சம்மட்டி
சீலமன்னவன்றன்செங்கோறிரட்சியாழ்நரம்போடம்பு
நீலவஞ்சனக்கோலோடுநீளிலந்தையும்பன்னோர்பேர்
காலிலியருணன்பாம்புகாற்றொடுமுப்பேராமே. (க௮)

கூலமேபண்ணிகாரம்புனற்கரைகோவிலங்கின்
வாலோடாவணமேபாகல்வரம்பொடுகுரங்கெண்பேரே
காலிடமரக்கால்பிள்ளைகுறுந்தறிவனங்காம்பூறறம்
காலனங்குரங்கால்வாய்க்கால்காற்றுதேருருள்பனமூன்றே. ()

கோலமேயழகுபன்றிபாக்குநீர்க்கொழுந்துயிர்க்காம்
மாலியேயிரவிகள்ளாமாந்தலேமரித்தலுண்டல்
வேலயில்படைக்கலப்பேர்வேதண்டங்கைலைவெற்பாம
சாலிநெற்பொதுவுங்கள்ளுமருந்ததிதானுமாமே. (௨0)

உலவைகான்மரத்தின்கொம்போடுறுதழைவிலங்கின்கோடாம
மலைதலேபொரல்சூடற்பேர்மந்திரிகுபேரன்வெள்ளி
யலாயழிவிரிபூநீராமவிர்தலேயொளிபீறற்பேர்
எலிபூராநாளெலிப்பேரிரணம்பொன்கடன்மாணிக்கம். (௨க

ஆலயநகரங்கோயிலானையின்கூடமுப்பேர்
பாலமேமழுநெற்றிப்பேர்பவித்திரஞ்சுசிதருப்பை
ஞாலோர்மந்திரிகள்பார்ப்பார்நுவல்கவிப்புலவர்க்கும்போ
வேலாவலயந்தான்பூமிவிரிகடலிருபேராமே. (௨௨

சூலியேகருப்பப்பெண்ணுந்துர்க்கையுஞ்சிவனுமுப்போ
வாலியேயலாயுதன்கிட்கிந்தையின்மன்னன்பேராம்
பால்புடையியல்புதிக்குப்பகுத்தல்பாலென்னுமைம்போ
ஏலமேமயிர்ச்சாந்தோடேயேலத்தின்பேருமாமே. (௨௩

லகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௨௨௩.



வல்லையென்பது-பெருங்காடு,காலவிரைவு,வலிமை. ௩. வடம்-மணி, வடம், ஆலமரம், கயிறு. ௩.
பல்லம்—ஓரெண், அம்பு, குதிரைக்கலணை, கரடி. ௪.
மல்லல்—வலிமை, வளம். ௨. வாயில்—ஐம்புலன், வாயில். ௨.
முல்லை—வனமல்லிகை, வெற்றி, முல்லைநிலம, கற்பு. ௪.

கோல்—ஈட்டி, விட்டேறு, எழுதுகோல், துலாம், குதிரைச்சம்மட்டி, செங்கோல, திரட்சி, யாழினரம்பு, பாணம், அஞ்சனககோல், இலந்தை. கக.
காலிலி—சூரியன்றேர்ப்பாகன், பாம்பு, காற்று. ௩.

கூலம்—பலபண்டம், நீர்ககரை, பசு, விலங்கின்வால், கடைவீதி, பாகல், வரம்பு, குரங்கு. அ.
கால்—இடம், மரக்கால், புததிரன், குறுந்தறி, காடு, காம்பு, ஊன்றுகோல், காலன், முளை, பாதம், வாயக்கால், காற்று, தேருருள்.

கோலம்—அழகு, பன்றி, பாக்கு, நீரோட்டம், பீர்க்கு. ௫.
மாலி—சூரியன, கள். ௨. மாந்தல்—சாதல், உண்டல். ௨.
வேல்—வேலாயுதம்,ஆயுதப்பொது.௨.வேதண்டம்—வெள்ளிமலை, மலை. ௨. சாலி—நெற்பொது, கள, அருந்ததி. ௩.

உலவை—காற்று, மரக்கொம்பு, தழை, விலங்கின்கொமபு. ௪.
மலைதல்—பொருதல்,அணிதல்.௨.மந்திரி—குபேரன,சுக்கிரன. ௨.
அலர்-பழிமொழி,மலாநதபூ,*நீர்.௩.அலிாதல்-ஒளிசெய்தல்,பிறல்.
எலி—பூரநக்ஷத்திரம்,எலி.௨. இரணம்-பொன,கடன,மாணிக்கம்.

ஆலயம்—நகரம், தேவர்கோயில், யானைக்கூடம. ௩.
பாலம்—மழுப்படை, நெற்றி. ௨.
பவித்திரம்—தூய்மை, தருப்பை. ௨. நூலோர்—மந்திரிகள், பிராமணர், புலவர். ௩. வேலாவலயம்—பூமி, கடல. ௨.

சூலி—கருப்பவதி, துர்க்கை, சிவன். ௩.
வாலி—பலதேவன், கிட்கிந்தைமன்னன். ௨.
பால்—பக்கம், குணம், திசை, பங்கு, பால். ௫.
ஏலம்—மயிர்ச்சாந்து, ஏலம். ௨.



* மறைந்யலர் - நீர்.

# வகரவெதுகை.

நவமென்பபுதுமைகேண்மையொன்பதுநற்கார்காலம்
கவனமேகலக்கம்வெம்மைகுதிரையின்கதிபோர்காடாம்
உவணமேகலுழனுகுமுயர்ச்சிக்குங்கழுகுக்கும்பேர்
பவனமேயிராசிபூமிபடர்காற்றுமனையேகோயில். (௧)

புவனநீர்புவியுமாகும்புரத்தலைகாத்தல்வண்மை
நுவணைநாணுண்மைபிண்டிநூலேசாத்திரமுந்தந்தும்
தவவென்பமிகுதிகுன்றறந்தேநூல்சாத்திரப்பேர்
சிவநன்மைகுறுணிமுத்தேசீவனேயுயிர்வியாழன். (௨)

இவறலேமறவியாசையென்பபேரிச்சைக்கும்பேர்
இவர்தலேயெழுச்சியாசையேறுதல்சேறன்மேவல்
சுவவென்பபுள்ளின்மூக்குஞ்சுவர்க்கமுஞ்சுண்டனும்பேர்
குவவென்பதிரட்சிமற்றுங்குவிதலேபெருமைக்கும்பேர். (௩)

தவிசென்பதடுக்குமெத்தையிலகடமும்பேர்தானே
சவிமணிக்கோவைசெவ்வைசாற்றியவனப்புக்காந்தி
நவிரமேமஞ்ஞைபுன்மைநன்மலையுடனேயுச்சி
நவிலல்சொல்லுதல்பண்ணற்பேர்நவியமேமழுக்கோடாலி. (௪)

கவுசிகம்விளக்குத்தண்டோர்பண்பட்டுக்கடியகோட்டான்
சவுரியேதிருமால்கள்வன்சனியமனினையநாற்பேர்
மவுலியேமுடிகோடீரம்வட்கலென்பதுநாண்கேடாம்
கவலைசெந்தினையோர்வல்லிகவர்வழிதுன்பநாற்பேர். (௫)

சேவகம்வீரம்யானைதுயிலிடந்துயிலுஞ்செப்பும்
சீவனியோர்மருந்துசெவ்வழித்திறத்தோரோசை
ஆவணம்புணர்தம்வீதியங்காடியுரிமைநாற்பேர்
நீவியேதுடைத்தலாடைநெருங்குகொய்சகமும்பேரே. (௬)

உவளகமதிலோர்பக்கமுருணிபள்ளமுள்ளில்
கவடென்பகப்பியானைக்கழுத்திடுபுரசைக்கும்போ
சிவையுமைமரவேர்கொல்லனுலைமுகந்திரியுமோரி
கவையேயாயிலியங்காடுகவர்கழியெள்ளிளங்காய். (௭)

சிவப்பென்பசினமுஞ்செம்மையுடன்சினக்குறிப்புமும்பேர்
உவப்பென்பமகிழ்ச்சிமேடாமொழுக்கமேவழியாசாரம்
தெவிட்டலேயடைத்தல்கான்றனிறைதலுமொலியுஞ்செப்பும்
துவக்கேதோல்பிணக்கிரண்டாஞ்சூழலேயிடம்விசாரம். (௮)

# வகரவெதுகை.

நவமென்பது—புதுமை, நட்பு, ஒன்பது, கார்காலம். ௪.
கவனம்—கலக்கம், வெப்பம், குதிரையின்வேகம், போர், காடு. ௫.
உவணம்—கருடன், உயர்ச்சி, கழுகு. ௩.
பவனம்—இராசி, பூமி, காற்று, வீடு, அரசரில். ௫.

புவனம்—நீர், பூமி. ௨. புரத்தல்—காத்தல், கொடுத்தல். ௨.
நுவணை—கல்விநூல், நுட்பம், மா. ௩. நூல்-சாத்திரம், பஞ்சிநூல்.
தவ—மிகுதி, குறைதல். ௨. தந்து—பஞ்சிநூல், சாத்திரம். ௨.
சிவம்—நன்மை, குறுணி, மோட்சம். ௩. சீவன்—உயிர், வியாழன்.

இவறல்—மறதி, ஆசை, வேட்கைப்பெருக்கம். ௩.
இவர்தல்—எழுச்சி, ஆசை, ஏறுதல், செல்லுதல், சேருதல. ௫.
சுவவு—பறவைமூக்கு, சுவர்க்கம், மூஞ்சூறு. ௩.
குவவு—திரட்சி, குவிதல், பெருமை. ௩.

தவிசு—தடுக்கு, மெத்தை, யானைமேற்றவிசு. ௪.
சவி—மணிககோவை, செவ்வை, அழகு, ஒளி. ௪.
நவிரம்—மயில், புன்மை, மலை, உச்சி. ௪.
நவிலல்—சொல்லல், செய்தல், ௨. நவியம்—மழுப்படை, கோடாலி.

கவுசிகம்—விளக்குத்தண்டு, ஒருபண், பட்டுச்சீலை, கோட்டான். ௪.
சவுரி—திருமால், கள்வன், சனி, யமன். ௪.
மவுலி—முடி, சடை. ௨. வட்கல்—நாணம், கெடுதல். ௨.
கவலை—கம்பு, [செந்தினை] ஒருகொடி, கவர்வழி, துன்பம். ௪.

சேவகம்—வீரம், யானைதுயிலிடம், நித்திரை. ௩.
சீவனி—மிருதசஞ்சீவனி, செவ்வழித்திறத்திஞேசை. ௨.
ஆவணம்—புனர்பூசநக்ஷத்திரம், தெரு, கடைவீதி, உரிமை. ௪.
நீவி—துடைத்தல், வஸ்திரம், கொய்சகம். ௩.

உவளகம்—மதில், ஒருபக்கம், குளம், பள்ளம், அந்தப்புரம். ௫.
கவடு—மரக்கொம்பு, யானைக்கழுத்திடுகயிறு. ௨.
சிவை—பார்ப்பதி, மரவேர், கொல்லனுலைமூக்கு, நரி. ௪.
கவை—*ஆயிலியநக்ஷத்திரம், காடு, கவர்வழி, எள்ளிளங்காய். ௪.

சிவப்பு—கோபம், சிவப்பு, கோபக்குறிப்பு. ௩.
† உவப்பு—களிப்பு, மேடு. ௨. ஒழுக்கம்—வழி, ஒழுக்கம். ௨.
தெவிட்டல்—அடைத்தல், உமிழ்தல், நிறைதல், ஒலித்தல். ௪.
துவக்கு—தோல், பிணக்கு. ௨. சூழல்—இடம், ஆராய்தல். ௨.

---

* கௌவை - ஆயிலியநக்ஷத்திரம். † உகப்பு - உயர்ச்சி

சேவலேகாவலோடுசேறுபுள்ளாண்முப்பேரே
சேவலந்தனிமைமுதலிரண்டுமென்பதுபாலின்னை
பூவைசாரிகைகாயாவாம்புலிங்கமுழுவைசார்ந்தே
வாவலஞ்சலிகைப்புள்ளுந்தாவலும்வருக்கலாமே. (கூ)

சுவல்பிடர்தோண்மேனமேடுதூரகதக்குசைநாறபேரே
கவிமந்திபுல்லன்சுங்கன்கழியெனபமிகுதிகாயல்
நவிருளிமருதயாழுவாணுஞ்சிலெநதிரங்கலப்பை
கவிகையேகுடைகொடைபயோகடிப்பங்காதணிபூணசெபபாம. ()

மாவண்டுபெருமைபிண்டிவாசிகூப்பிடல்வெறுத்தல்
காவுறுவிலங்குசெலவஙகருந்றஙகமலைபததாம
கோவிழிபசுநீதிகருககுலிசமவிணகிரணம்பூமி
ஏவுரைசுவாககமவேநதனிரஙகலவெறபீரேழாமே. (கக)

ஆவியேவாவிநாறறமாருயிாபுகைமூச்சைமபோ
சுவிரநதோதோமொட்டாஙகுவடுநீணமலைவெறபுச்சி
காவியேகுவளைகாவிககலலொடுகளுமுப்போ
நாவிதனமஞ்சிகனகாாததிகைபூரநாளுமாமே. (கஉ)

ஆவெனபதிரக்கமபெறறமாச்சாவோடிசைவியப்பாம
காவென்பதுலாமபூஞ்சோலைகாததரூடசுமைநாறபேரே
பாவெனபபனுவனூறபாபரவுதலபரப்புமாகும
தாவெனபபகைவருததநதாண்டுதல்வலிகேடைம்பேர். (கங)

கவவையேபழிச்சொறுனபஙகளளொலியெளளிளஙகாய
பவவமேகுமிழிவாரிபருமரக்கணுவுவாவாம்
தவவைமுன்பிறநதாளோடுதாயுமூதேவியும்போ
நவவியேதோணிமானுநனறெனபபெருமைநனமை. (கச)

அவலேசிறறுணடிபளளநீாநிலையாகுமபபோ
செவிலியேவளாததகைததாயமுனபிறநதவளுஞ்செப்பும
கவுடமோர்கொடியோாதேசமிருபெயாகழறலாமே
சுவடுவெச்சிராஙகியோரெணசுபமெனபதழகுவெண்மை. (கரு)

பவமென்பசனனம்பாவம்பாவர்தான்விளைதியானம்
சவுரியஙகளவுவீரந்தண்மைதான்குளிர்சசிதாழ்வு
யவமொருதானியப்பேரென்பநெல்லிற்குமப்பேர்
யவனர்சோனகர்கண்ணுளர்சிததிரகாரரென்ப. (கசா

சேவலென்பது—காவல், சேறு, மயிலுமெழாலுமொழிந்தபறவை யாண். ௩. கேவலம்—தனிமை,மோட்சம். ௨. கிரம்—பால்,கிளி. பூவை—நாகணவாய்ப்புள்,காயா. ௨. புலி—சிங்கவிராசி,புலி,நால் வகைச்சார்திலொன்று. ௩. வாவல்—வெளவால், கடத்தல். ௨.

சுவல்—பிடர், தோண்மேல், மேடு, குதிரைமயிர். ௪.
கவி—குரங்கு, புலவன், சுக்கிரன். ௩. கழி—மிகுதி, கழியல். ௨.
நவிர்—ஆண்மயிர், மருதயாழ்த்திறம், வாள். ௩.
நாஞ்சில்—மதிலுறுப்பு,கலப்பை.௨. கவிகை—குடை,கொடை.௨.
கடிப்பம்—காதணி, ஆபரணச்செப்பு. ௨.

மா—வண்டு, பெருமை, மா, குதிரை, அழைத்தல், வெறுப்பு, விலங்கின்பொது, செல்வம், கருநிறம், திருமகள். ௧௦.
கோ—கண், பசு, நீர், திசை, வச்சிராயுதம், ஆகாயம்,கிரணம்,பூமி, அம்பு, சொல், தேவலோகம், அரசன், இரங்கல், மலை. ௧௪.

ஆவி—குளம், வாசனை, உயிர், புகை, உயிர்ப்பு. ௫.
கூவிரம்—தேர்,தேர்க்கொடிஞ்சி.௨.குவடு—மலை,மலையினுச்சி. ௨.
காவி—கருங்குவளை, காவிக்கல், கள். ௩.
நாவிதன்-மயிர்களைவோன், கார்த்திகைநக்ஷத்திரம்,பூரநக்ஷத்திரம்.

ஆ—இரக்கம், பசு, ஆச்சாமரம், இசை, அதிசயம். ௫.
கா—துலை, சோலை, காத்தல், தோட்சுமை. ௪.
பா—பஞ்சிநூல், தூறபா, பரவுதல், பரப்பு. ௪.
தா—பகை, துன்பம், தாண்டுதல், வலிமை, கேடு. ௫.

கவ்வை—பழிச்சொல், வருத்தம், கள், ஒலி, எள்ளிளங்காய. ௫.
பவ்வம்—நீர்க்குமிழி, கடல், மரக்கணு, பௌர்ணிமை. ௪.
தவ்வை—தமக்கை, தாய், மூதேவி. ௩.
நவ்வி—தோணி, மான். ௨. நன்று—பெருமை, நன்மை. ௨.

அவல்—ஒருசிற்றுண்டி, பள்ளம், குளம். ௩.
செவிலி—வளர்த்ததாய், முன்பிறந்தாள். ௨. கவுடம்—ஒருகொடி, ஒருதேசம். ௨.
சவடி—வச்சிராங்கி,ஒருநெல்லிலக்கம். ௨. சுபம்-அழகு,வெண்மை.

பவம்—பிறப்பு, பாவம். ௨. பாவம்—தீவினை, தியானம். ௨.
சவுரியம்—களவு, வீரம். ௨. தண்மை—குளிர்ச்சி, தாழ்வு. ௨.
யவம்—ஒருவகைத்தானியம், நெல். ௨.
யவனர்—சோனகர், கம்மாளர், சித்திரகாரர். ௩.

ஆவரணந்தான்சட்டைதடைமறைப்பரணமாடை
ஏவலேவியமகோளென்பவெய்தியவறுமைக்கும்பேர்
ஒவியர்சிற்பநூலோரொடுசித்திரகாரரும்பேர்
ஓவிரக்கச்சொனிக்கமோடுகீர்தகைகபாடம். (கஎ)

அவ்வையேதாயின்பேருமௌவையோடிருபேராமே
செவ்வியேர்பொழுதினோடுசெப்பியபருவமாகும்
செவ்வமாபகையிரண்டாந்தீவினைகொடுமைபாவம
சைவமோராபுராணமீசன்சமயத்தின்விகற்புமாமே. (கஅ)

வகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - உ௪௭.

# ழகரவெதுகை.

விழவென்பமிதுனராசிவிளமருமுர்சவுமுமாகும்
கழையெனபபுனாதமூங்கில்கரும்பெனவிரும்புமுப்போ
கழல்கழமகொடுசெருப்புக்காலணிகாலின்நாற்பேர்
கிழமைமூப்புரிமைபண்பாமகிழிகிதிப்பொதிகிளுமே. (க

சூழியேசுனையும்வெய்யதும்பியின்முகபடாமும்
பாழியேவலிவிலங்கின்படுக்கையூர்பறதிலாரூர்
நாழியேயளக்குநாழிநாழிகைபூரட்டாதி
ஆழிமோதிரமேநேமியலைகடல்கரையேவட்டம். (உ

இழுமெனலோசையென்பவினிமையுமியம்புமப்பேர்
விழுமமேசிறப்புச்சீர்மையிடும்பையும்விதித்தபேரே
தொழுவென்பதுமலைதானேயிரேவதிநாளுஞ்சொல்லும்
செழுமையேவளமகொழுப்பாந்தேனென்பநறவும்வண்டும். (௩

கழுதுபேய்பரண்வண்டென்பகயவுகீழ்பெருமையென்மை
அழுவமேபரப்புநாடுமெழுங்கலேயிரங்கல்கேடாம
கழுமல்பற்றுடுமயக்கமகாதலேயாசைகோறல்
கழிதலென்பதுவேசாதல்கடந்திடன்மிகுதிமுப்பேர். (௪

மாழைபொன்னுலோகக்கட்டிமடமையோர்புளிமாவோலை
கூழையேசிறகுமாதர்கூந்தல்வெம்படையுறுப்பாம்
தாழைகேதகைதெங்காகுஞ்சாகினிசேம்புகீரை
ஊழ்முறைவெயில்பகைப்பேருதியேகூரியாணி. (௫

ஆவரணமென்பது—சட்டை, தடுத்தல், மறைப்பு, கோட்டை, வஸ்திரம். ரு. ஏவல்—வியங்கோள், தரித்திரம். உ
ஓவியர்—சிற்பாசாரியர், சித்திரகாரர். உ
ஓ—இரக்கச்சொல், நீங்குதல், மடையடைக்குங்கதவு. ௩

அவ்வை—தாய், ஔவையார். உ
செவ்வி—அழகு, காலம், பருவம். ௩
தெவ்—போர், பகை. உ. தீவினை—கொடுமை, பாவம். உ
சைவம—ஒருபுராணம், உட்சமயங்களாறனுளொன்று. உ



# ழகரவெதுகை.

விழவென்பது—மிதுனராசி, திருவிழா. உ.
கழை—புனர்பூசநக்ஷத்திரம், மூங்கில், கரும்பு. ௩.
கழல்—கழற்காய், செருப்பு, காலணி, கால். ௪.
கிழமை—முதுமை, உரிமை, குணம். ௩. கிழி—கிழிப்பொதி, கீறு. உ.

சூழி—சுனை, யானைமுகபடாம். உ.
பாழி—வலிமை, விலங்கின்படுக்கை, ஊர், பகைவரூர். ௪.
நாழி—அளக்குநாழி, நாழிகை, பூரட்டாதிநக்ஷத்திரம். ௩.
ஆழி—மோதிரம, சக்கராயுதம, கடல், கடற்கரை, வட்டம. ரு.

இழுமெனல்—அனுகரணவோசை, இனிமை. உ.
விழுமம்—சிறப்பு, சீர்மை, துன்பம். ௩.
தொழு—தொழுமரம, இரேவதிநக்ஷத்திரம. உ.
செழுமை—வளம், [மாட்சிமை] கொழுப்பு. உ. தேன்—கள், வண்டு.

கழுது—பேய், பரண், வண்டு. ௩. கயவு-கீழ்மை, பெருமை, மென்மை.
அழுவம்—பரப்பு, நாடு. உ. அழுங்கல்—இரங்கல, கேடு. உ.
கழுமல்—பற்றுதல், மயக்கம். உ. காதல்—ஆசை, கொல்லுதல். உ.
கழிதல்—சாதல், கடத்தல், மிகுதி. ௩.

மாழை—பொன், உலோகக்கட்டி, அறிவின்மை, அழகு, புளிமா, ஓலை.
கூழை—சிறகு, பெண்மயிர், படையுறுப்பு. ௩.
தாழை—தாழை, தென்னைமரம். உ. சாகினி—சேம்பு, சிறுகீரை. உ.
ஊழ்—முறை, வெய்யில், பகை. ௩. ஊசி—சூசி, எழுத்தாணி. உ.

உழையென்பதிடமான்யாழிளோர்நரம்பிற்கும்பேராம்
குழையென்பதளிர்துவாரங்குண்டலஞ்சேறுகாற்பேர்
விழையென்பபுணர்ச்சிகாதல்வெறுக்கையென்பதுபொன்செல்வம்
வழிமரபிடம்பின்மார்க்கம்வழங்கலேகொடையுலாவல். (௬)

ஈழம்பொன்கள்ளோர்தேசமெல்லையேயளவைவெய்யோன்
மேழகங்கவசமாடாமவேளாண்மைகொடையேமெய்ம்மை
காழியாவண்ணருப்புவாணிகரிருபோகாட்டும்
வேழமேகரும்பியானைகொறுக்கைச்சிவேணுநாறபேர். (௭)

கூழென்பதுணவும்பொன்னும்பயிரென்றுங்கூறும்போ
காழென்பமணியின்கோவைகறபரல்சேருவிததாம்
யாழென்பமிதுனம்வீணையிரலைநாளாதிரைப்பேர்
கீழெனபதிடங்கீழ்சாதிகீழ்ததிசைகயமைநாறபோ. (௮

கோழியேகுருகோரூராங்குய்யமேமறைவுயோனி
மூழியேவாவிசோறேடகப்பையுமொழியுமுப்பேர்
மூழையேயகப்பைசோறுமுறஞ்சுளகொடுவிசாகம்
நாழிலேகோறல்யானைநண்கொடிகொடிக்கொத்தான்போ. (௯

தொழுதிபுளளொலிகூட்டபபோதொறுநிரையடிமைகூட்டம்
கெழுவுதன்மயககமபறருங்கிலாலங்கறைநீர்காடி
குழறுளேயுடைப்பொருட்போமயிரிசைக்குழன்முப்பேரே
அழிவெனபவீதல்கேடாமவிநெயசோறமரருண்டி. (௧௦

ழகரவெதுகை முற்றிற்று.

ஆ விருததம் - உ௱எ.

—o◇o—

## ளகரவெதுகை.

குளறுதல்கரும்பின்கட்டிகுட்டமுமிட்டநாமம்
களமமர்க்களமேகண்டங்களாவிடங்கறுப்பேயில்லாள
வளமைமாட்சிமைகொழுப்பாம்வாருணங்கடலுமேற்கும்
விளவென்பகமர்விளாவாம்விம்மலேங்குதலொலித்தல். (௧

மூளரியேவிறகுசெந்தீமுண்டகஞ்சிறுமைகாடாம்
விளரென்பதிளமைதானேவெளுப்பொடுகொழுப்புமாகும்
களபமேயானைக்கன்றுகமழ்சாந்தகலவைமுப்பேர்
உளர்தலேசிதறலாகுந்தடவலுமுறைத்தற்பாற்றே. (௨

உழையென்பது—இடம், மான், யாழிஞோர்நரம்பு. ௩.
குழை—தளிர், துவாரம், குண்டலம், சேறு. ௪. விழைவு—புணர்ச்சி, ஆசை. ௨. வெறுக்கை—பொன், செல்வம். ௨. வழி—மரபு, இடம், பின், வழி. ௪. வழங்கல்—கொடுத்தல், உலாவல். ௨.

ஈழம்—பொன், கள், சிங்களதேசம். ௩. எல்லை—அளவு, சூரியன். ௨.
மேழகம்—கவசம், ஆடு. ௨. வேளாண்மை—கொடை, உண்மை. ௨.
காழியர்—வண்ணார், உப்புவாணிகா. ௨.
வேழம்—கரும்பு, யானை, கொறுக்கை, மூங்கில். ௪.

கூழ்—உணவு, பொன், பயிர். ௩.
காழ—மணிவடம், பருக்கைக்கல், மரவயிரம, விதை. ௪.
யாழ்—மிதுனராசி, வீணை, அச்சுவினிநக்ஷத்திரம, திருவாதிரை நக்ஷத்திரம. ௪. கீழ்—இடம, கீழ்சாதி, கிழக்கு, கீழ்மை. ௪.

கோழி—கோழி, உறையூர். ௨. குயயம்—மறைவு, பெண்குறி. ௨.
மூழி—குளம, சோறு, அகப்பை. ௩. மூழை—அகப்பை, சோறு. ௨.
முறம்—சுளகு, விசாகநக்ஷத்திரம். ௨.
ஞாழில்—கொல்லல், யானை, படர்கொடி, கொடிக்கொத்தான். ௪.

தொழுதி—பறவையினொலி, கூட்டம, [பறவைக்கூட்டம்.] ௨.
தொறு—பசுக்கூட்டம, அடிமை, கூட்டம. ௩. கெழுவுதல—மயக்கம், பறறு. ௨. கீலாலம—இரத்தம், நீர, கஞ்சி. ௩.
குழல்—துளையுடைப்பொருள, மயிர, இசைக்குழல. ௩.
அழிவு—சாதல், கேடு. ௨. அவி—நெய், சோறு, தேவருணவு. ௩.



# ளகரவெதுகை.

குளிமென்பது—நெற்றி, சாக்கரை, தடாகம். ௩.
களம்—போர்க்களம், கழுத்து, களாச்செடி, கஞ்சு, கறுப்பு, மனைவி.
வளமை—மாட்சிமை, கொழுப்பு. ௨. வாருணம்—கடல், மேறகு. ௨.
விளவு—நிலப்பிளப்பு, விளாமரம். ௨. விம்மல், அழுதல், ஒலித்தல்.

முளரி—விறகு, நெருப்பு, தாமரை, நுண்மை, காடு. ௫.
விளர்—இளமை, வெண்மை, கொழுப்பு. ௩.
களபம்—யானைக்கன்று, சாந்து, கலவைச்சாந்து. ௩.
ஒளிர்தல்—சிந்தல், தடவல். ௨.

குளிர்மழுநண்டிருத்தல்குளிர்கவண்முழாமீன்றலை
நளிர்குளிர்பெருமைஞெண்டொட்டியசெறிவுநாற்பேர்
ஒளிவட்டந்தான்கண்ணாடிசக்கரமிருபேரோதும்
இளியிசையிசித்தலெல்லையிணைநகுதலுரித்தற்கும்பேர். (௩)

பளிதமென்பதுகாப்பூரம்பல்லமென்கணக்குமாகும்
வெளிலணில்வேழத்தம்பம்வெண்டயிர்கடைதறிப்பேர்
களிறெனபவத்தநாளேகறையடிசுறவுபன்றி
ஒளியிருசுடரேதீயேயொளிப்பிடம்புகழுமாமே. (௪)

பாளிதஞ்சோறுகண்டசருக்கரைகுழம்புபட்டாம்
ஓளியேயானைக்கூடமொழுங்கென்றும்வழங்குநாலே
கோளிதொன்மரமேயத்திகொள்வோனுங்கொழிஞ்சியும்பேர்
மீளிதிண்ணியன்வலிபேய்மேன்மகன்பெருமைக்கும்பேர். (௫)

அளைதயிர்முழைபுற்றுக்குமசனியேயுருமுவச்சிரம்
உளைபரிமீதுகட்டுமயிராபிறமயிருமோதும்
கிளையென்பதோர்பண்மூங்கில்கேளொடுகிளைத்தலும்பேர்
இளைபுயலிளமைவேலிதலைக்காவலிவைநாற்பேரே. (௬)

உள்ளலேநினைவுள்ளான்பேருழப்பெனபவலியுறசாகம்
ஞெள்ளலேபள்ளமேன்மைநீண்டவீதியுமப்பேரே
எள்ளலேநகையிழிப்பாம்யாமகதெற்கிரவுசாமம்
ஞொள்கல்சோம்பிளைத்தலச்சங்குறிடபென்றுநுவலற்பாலாம். (௭)

வள்ளென்பகாதுகூர்மைவலிவளம்வாளேவாராம்
வெள்ளையேமுசலிசங்குவெளிறுவெள்ளாடுவெண்பா
கள்வனேமுசுஞெண்டியானைகருநிறத்தவனேசோரன்
பள்ளியூர்சிற்றூர்கோயில்பாயல்கண்படைநீத்தோரூர். (௮)

விளக்கொளிசோதிநாளாம்வேள்வியேமகநாளீதல்
அளக்கரேபுடவிசேறுப்பளங்கடல்கார்த்திகைப்பேர்
இளைத்தலேயனுபவித்தல்செறிதலேநிறைதன்முப்பேர்
இளைத்தலேயிளைப்பிரங்கலென்றுமேழியரவிவெய்யில். (௯)

பிள்ளையேவடுகன்காக்கைபெட்டையூன்விரும்பல்வேண்டல்
மள்ளரேமள்ளர்வீரர்மறவர்க்குங்குறவர்க்கும்பேர்
உள்ளமேமுயற்சிநெஞ்சாமுளுற்றிழுக்கொடுதாளாண்மை
வள்ளியேவல்லிசெங்கைவளைபுனையிழைமுப்பேரே. (௰)

குளிரென்பது—மழுப்படை, நண்டு, தங்குதல், குளிர்ச்சி, கவண், முழவு, மீனொழுங்கு. ௭. நளிர்-குளிர்ச்சி, பெருமை, நண்டு, நெருக்கம். ௪. ஒளிவட்டம்-கண்ணாடி, சக்கராயுதம். ௨. இளி-ஏழிசையினொன்று, சிரித்தல், இகழ்ச்சிக்குறிப்பு, இணங்குதல், உரித்தல்.

பளிதம்—கருப்பூரம், பல்லமென்னுமோரெண். ௨.
வெளில்—அணில், யானைத்தூண், தயிர்கடைதறி. ௩.
களிறு—அத்தநக்ஷத்திரம், யானை சுறு பன்றி இவற்றினாண். ௨.
ஒளி—சூரியன், சந்திரன், நெருப்பு, ஒளிப்பிடம், புகழ். ௫.

பாளிதம்—சோறு, கண்டசர்க்கரை, குழம்பு, பட்டுவர்க்கம். ௪.
ஒளி—யானைக்கூடம், ஒழுங்கு. ௨.
கோளி—ஆலமரம், அத்திமரம். கொள்வோன், பூவாதுகாய்க்குமரம்.
மீளி—திண்ணியன், வலிமை, மேன்மையுள்ளோன், பெருமை. ௪.

அளை—தயிர், மலைக்குகை, புற்று. ௩.
அசனி—இடி, வச்சிராயுதம். ௨. உளை—குதிரைக்கணிமயிர், பிறமயிர். ௨. கிளை—ஒருபண், மூங்கில், உறவு, கிளைத்தல். ௪.
இளை—மேகம், இளமை, வேலி, தலைக்காவல். ௪.

உள்ளல்—நினைத்தல், உள்ளான்குருவி. ௨. உழப்பு—வலிமை, உற்சாகம். ௨. ஞெள்ளல்—பள்ளம், மேன்மை, வீதி. ௩. எள்ளல்—நகைப்பு, இகழ்ச்சி. ௨. யாமம்—தென்றிசை, இரா, சாமம். ௩. ஞொள்கல்—சோம்பல், இளைத்தல், அச்சக்குறிப்பு. ௩.

வள்-காது, கூர்மை, வலிமை, வளம், வாள், வார். ௬. வெள்ளை-பலபத்திரன், சங்கு, வெண்மை, வெள்ளாடு, வெண்பா. ௫. கள்வன்-முசு, நண்டு, யானை, கரியன், திருடன். ௫. பள்ளி—மருதநிலத்தூர், [ஊர்] சிற்றூர், கோயில், மக்கட்படுக்கை, நித்திரை, முனிவரிருப்பிடம்.

விளக்கு—தீபம், சோதிநக்ஷத்திரம். ௨. வேள்வி—யாகம், மகநக்ஷத்திரம், கொடை. ௩.
அளக்கர்—பூமி, சேறு, உபபளம், கடல், கார்த்திகைநக்ஷத்திரம். ௫.
திளைத்தல்—அநுபவித்தல், நெருங்கல், நிறைதல். ௩.
இளைத்தல்—மெலிவு, இரங்கல். ௨. என்றூழ்—சூரியன், வெய்யில்.

பிள்ளை—வைரவக்கடவுள், காக்கை. ௨. பெட்டல்—விரும்பல், வேட்கைப்பெருக்கம். ௨.
மள்ளர்—உழவர், படைவீரர், திண்ணியர், குறிஞ்சிநிலமாக்கள். ௪.
உள்ளம்—முயற்சி, மனம். ௨. உஞற்று—இழுக்கு, முயற்சி. ௨.
[illegible] ௩

காளமேயூதுகொம்புகழுநஞ்சுகருமைநாற்பேர்
வேளாமுகன்காமன்பேர்விபூதியூண்கொடுமைசெல்வம்
கோளிடையூறொன்பான்கோள்கொலைகுணம்வலிபொய்கொள்கை
ஞாளியேசுணங்கன்கள்ளாநான்முகனருகன்வேதா. (௧௧)

களரென்பமிடறுகோட்டிகளர்நிலங்கருமைநாற்பேர்
தளமிலைபடையேசாந்துதாழிபூவிதழ்மேடை
அளகமேமாதரோதியறன்மயிர்க்குழற்சிமுப்பேர்
தளைவிலங்கொடுதொடாச்சிதாட்சிலம்பாண்மயிர்ப்போ. (௧௨)

[illegible]ள்ளுவண்டவிட்டம்புட்பேர்புளகந்தர்ப்பணங்குமிழ்ப்பாம்
கள்ளென்பகளவுகள்ளாங்கனலிதீயிரவிபன்றி
அள்ளுரஞ்செறிவுகாதோடயிலும்பற்றிரும்புமாகும்
வெள்ளமெண்மிகுதிமூநீர்வேணுவேமூங்கில்வில்வாள். (௧௩)

வாளென்பதொளிகட்கப்பேர்வல்லரிதளிர்பைங்காயாம்
கூளிபேயதமரேறுசுகுறள்படைத்தலைவன்கூட்டம்
தோளென்பபுயங்கையாகுஞ்சுந்தரியுமையேசுண்டன்
தேளென்பதனுடநாளேவிருச்சிகந்தெறுக்காலும்பேர். (௧௪

அளியென்பநறவும்வண்டுமன்பொடுகொடையுநாறபேர்
அளவையேயெல்லைநாளாமாசாரந்துகிறுமாரி
விளரியேயிளமையாழிலோர்நரம்பியாழ்நீள்வேட்கை
வளமென்பபதவியும்பல்பண்டமும்வனப்புமாகும். (௧௫

வள்ளமேமரக்கால்வட்டில்கடிகைவட்டிற்குமப்பேர்
வள்ளுரம்பசுவிரைச்சிவரைந்தலூன்பொதுவுமாகும்
அள்ளலேநரகஞ்சேறுமம்புநீர்புயல்வேயேவாம்
வெள்ளிலேவிளாபபாடைப்பேர்வேலன்வேள்வெறியாட்டாளன்.

காளையேயெருதுபாலைக்கதிபனல்லிளமையோன்பேர்
கூளியர்நண்பர்பூதகணைவீரர்கொலைத்திறத்தோர்
கோளகைவட்டமோடுமண்டலிப்பாம்புங்கூறும
கேள்வியேசெவிகல்விப்பேர்கிடங்ககழ்வாவியாமே. (௧௭

இளமையேதன்மைகாமமிளமையின்பருவமுப்பேர்
அளறென்பநரகஞ்சேறுமக்காரம்புடைவெல்லம்
கிளரென்பகிரணத்தோடுகிளர்கோட்டுமலர்ப்பூந்தாதாம்
களரியோர்க்களங்காடென்பகருமஞ்செய்யிடமுமாமே. (௧௮

ளகரவெதுகை முற்றிற்று.

ஆ. விருத்தம் - ௨௭௫.

காளமென்பது-ஊதுகொம்பு,சூலம்,நஞ்சு,கறுப்பு.௪. வேள்-குமாரக்கடவுள்,மன்மதன்.௨.விபூதி-*தசை,பொல்லாங்கு,செல்வம்.
கோள்-இடையூறு,நவக்கிரகம்,கொலை,குணம்,வலிமை,பொய்,கொள்கை.எ. ஞாளி—நாய்,கள். ௨. நான்முகன்-அருகன,பிரமன்.

களர்—கழுத்து, கூட்டம், களர்நிலம், கறுப்பு. ௪.
தளம்—இலை, சேனை, சாந்து, சாடி, பூவிதழ், உபரிகை. ௬.
அளகம்—பெண்மயிர், நீர், மயிர்க்குழற்சி. ௩.
தளை—விலங்கு, தொடர்பு, சிலம்பு, ஆண்மயிர். ௪.

புள்—வண்டு, அவிட்டநக்ஷத்திரம், பறவை. ௩.
புளகம்—கண்ணாடி, மயிர்சிலிர்த்தல். ௨
கள்—களவு, கள். ௨. கனலி—நெருப்பு, சூரியன், பனறி. ௩.
அள்—வலிமை, நெருக்கம், காது, கூர்மை, பறநிரும்பு. ௫.
வெள்ளம்—ஓரெண், மிகுதி,கடல். ௩. வேணு-மூங்கில்,வில்,வாள்.

வாள்—ஒளி, வாளாயுதம். ௨. வல்லரி—தளிர், பசுங்காய். ௨.
கூளி—பேய்,உறவு,எருது,குற்றம்,பூதம்,படைததலைவன்,கூட்டம்.
தோள்—புயம், கை. ௨. சுந்தரி—துர்க்கை, † மூஞ்சூறு. ௨.
தேள்—அனுடநக்ஷத்திரம், விருச்சிகராசி, தேள். ௩.

அளி—கள், வண்டு, அன்பு, கொடை. ௪
அளவை—எல்லை, நாள். ௨. ஆசாரம்—சீலை, தூய்மை,பெருமழை.
விளரி—இளமை,யாழிலோர்நரம்பு,நெய்தனிலத்தியாழ், வேட்கைப்பெருக்கம். ௪. வளம்—பதவி, பலபண்டம், அழகு. ௩.

வள்ளம்—மரக்கால், வட்டில், நாழிகைவட்டில். ௩. வள்ளுரம்—பசுவினிறைச்சி, தசைப்பொது. ௨. அள்ளல்—நரகம், சேறு.௨.
அம்பு—நீர், மேகம், மூங்கில், பாணம்.௪. வெள்ளில்—விளாமரம், பாடை. ௨. வேலன்—முருகக்கடவுள், வெறியாட்டாளன். ௨.

காளை—எருது, பாலைநிலத்தலைவன், கட்டிளமையோன். ௩.
கூளியர்—சினேகர், பூதகணவீரர், கொலையாளிகள். ௩.
கோளகை—வட்டம், மண்டலிப்பாம்பு. ௨.
கேள்வி—காது, கல்வி. ௨. கிடங்கு—அகழ், வாவி. ௨.

இளமை—தாழ்மை, காமம், இளமைப்பருவம். ௩.
அளறு—நரகம், சேறு. ௨. அக்காரம்—புடைவை, வெல்லம். ௨.
ஔர்—ஒளி, பூந்தாது. ௨.
களரி—போர்க்களம், காடு, தொழில்செய்யிடம். ௩.

* தி - தசை. † சுந்தரி - மூஞ்சூறு.

# றகரவெதுகை.

இறைவையேபுட்டிலேணியென்பகூர்மிருதிகூர்மை
குறடென்பபலகைதிண்ணைகொண்மூவென்பதுவின்மேகம்
புறவமோர்புள்ளுங்காடுமுல்லைநன்னிலனும்போற்றும
புறணியேகுறிஞ்சிமுல்லைநிலதொலிபுறமுமாதோலும். (க)

மறஞ்சினமணைக்குக்கூற்றுமலைந்தசேவகமுமாகும்
குறிஞ்சியோரிசையோர்பண்ணேகுறிஞ்சிசெம்முள்ளிக்கும்பேர்
பிறங்கலேமிகுதிவெற்புநிறைவொலிபெருமையைம்பேர்
குறும்பொறைமுனறுகாடுகுறிஞ்சிநன்னிலத்தூர்முப்பேர். (உ)

தாறுவிற்குதையேயெல்லைதாழுமரக்குலைமுடகோலாம்
சேறென்பரும்சாரந்தித்திப்புவிழவுகள்ளே
ஊறென்பதீமைதீண்டலுயிர்க்கொலையிடையூறென்ப
ஏறிடிமுதலாகுமிடபமோடெருதுமப்போ. (ங)

சிறையேவேதிடமாம்புனனிசிறகொடுகாவலும்போ
கறையிறுதகடவிரத்தங்கறுப்புரல்விடம்பேரைக்தே
முறையென்பகோசமேயூழமுறைமையிம்முப்பேரென்ப
பிறழ்தலேநடுக்கம்வேறுபெயர்தலோடொளிவிடற்போ. (ச)

ஏற்றலேகோடலென்பவெதிராதுபோர்செய்தலும்பேர்
ஆற்றலேபொறைமுயற்சியதிகமேவலியேஞானம்
தோற்றலேவலிபிறப்பதோன்றுதல்புகழேநாற்பேர்
போற்றலேபுகழ்தலோம்பலபுறமெனபமுதுகுவீரம். (ரு)

அற்றமேமறைவுஞ்சோர்வுமவகாசநாணுமாகும்
குற்றல்குற்றுதலபரித்தலகுரையென்பதிடைச்சொலோசை
எற்றென்பதிரக்கமோதலெறிதலெத்தன்மைத்தென்றல்
கொற்றியேதுர்க்கைநாமங்கோவிளங்கன்றுங்கூறும். (சு)

உறழ்வென்ப * புணர்வுகாலஞ்செறிவிடையீடொப்பைம்பேர்
உறவியேயெறும்புநீருற்றுலைக்களமுறவுயிர்ப்பேர்
உறுகணென்பதுவேதனபமுறுபயமிடிநோய்நாற்பேர்
உறுவனேமுனிபுத்தன்பேருலக்கையேயுரோங்கலோணம். (எ)

விறப்பென்பசெறிவுவெற்றிவெருவுதல்பொருளுற்பேர்
பொறுத்தலேபொறைதாங்கற்பேர்புற்றிதான்புதவேபுத்தி
இறுத்தலேயொடித்தறங்கலியம்புதன்முப்பேரென்ப
கறுப்பிருள்சினக்குறிப்பாங்கன்றுகைவளைகன்றுமே. (அ)

# றகரவெதுகை.

இறைவையென்பது—கூடை, ஏணி. ௨. கூர்—மிகுதி, கூர்மை. ௨.
குறடு—பலகை, திண்ணை. ௨. கொண்மூ—ஆகாயம், மேகம். ௨.
புறவம்—ஒருபறவை, காடு, முல்லைநிலம். ௩.
புறணி—குறிஞ்சிநிலம், முல்லைநிலம், புறம், தோல். ௪.

மறம்—கோபம், பிணக்கு, யமன், வீரம். ௪.
குறிஞ்சி—ஓரிசை, ஒருபண், குறிஞ்சிநிலம், செம்முள்ளி. ௪.
பிறங்கல்—மிகுதி, மலை, நிறைவு, ஒலி, பெருமை. ௫.
குறும்பொறை—மலை, [சிறுமலை] காடு, குறிஞ்சிநிலத்தூர். ௩.

தாறு—விற்குதை, அளவு, மரக்குலை, முட்கோல். ௪.
சேறு—சேறு, சாரம், இனிமை, திருவிழா, கள். ௫.
ஊறு—தீமை, தொடுதல், கொலை, இடையூறு. ௪.
ஏறு—இடி, அச்சுவினிநக்ஷத்திரம், இடபராசி, எருது. ௪.

சிறை—வேறிடம், பறவையினிறகு, காவல். ௩.
கறை—குடியிறை, இரத்தம், கறுப்பு, உரல், நஞ்சு. ௫.
முறை—புத்தகம், ஊழ், முறைமை. ௩.
பிறழ்தல்—நடுக்கம், வேறுதல், ஒளிசெய்தல். ௩.

ஏற்றல்—கொள்ளல், எதிர்த்துப்போர்செய்தல். ௨.
ஆற்றல்—பொறை, முயற்சி, மிகுதி, வலிமை, ஞானம். ௫.
தோற்றல்—வலிமை, பிறத்தல், தோன்றுதல், புகழ். ௪.
போற்றல்—புகழ்தல், பாதுகாத்தல். ௨. புறம்—முதுகு, வீரம். ௨.

அற்றம்—மறைவு, சோர்வு, சமயம். ௩.
குற்றல்—குற்றுதல், பறித்தல். ௨. குரை—ஓரிடைச்சொல், ஒலி. ௨.
எற்று—இரக்கக்குறிப்பு, அடித்தல், எறிதல், எத்தன்மைத்தென்றல்.
கொற்றி—துர்க்கை, பசுவினிளங்கன்று. ௨.

உறழ்வு—புணர்ச்சி, காலம், நெருக்கம், இடையீடு, உவமை. ௫.
உறவி—எறும்பு, ஊற்று, உலைக்களம், உறவு, உயிர். ௫.
உறுகண்—துன்பம், அச்சம், தரித்திரம், வியாதி. ௪. உறுவன—முனிவன், அருகன். ௨. உலக்கை—உலக்கை, திருவோணநக்ஷத்திரம்.

விறப்பு—நெருக்கம், வெற்றி, அச்சம், போர். ௪.
பொறுத்தல்—பொறுமை, சுமத்தல். ௨. புந்தி—புதன், புத்தி. ௨.
இறுத்தல்—ஒடித்தல், தங்குதல், சொல்லுதல். ௩.
[illegible] ௨. கன்று—கைவளை, கன்று, ௨.

பொதிமரக்கலமேசெல்வம்பூமகளெக்கிரங்கள்
அறிவிலாஞ்சனையெழுத்தோடைம்பொறிவரியொன்பான்போ
வெறிவெருவுதல்கலக்கம்வெறியாட்டுவெட்டனாற்றம்
குறியபேய்தருவைகள்ளுக்கூறுசோரயொன்பதாமே. (௯)

உறைபொருணமருநதுவாழ்நாளுணவுவெண்கலமேகாரம்
எறிபடைக்கதைதின்கூடேயெண்குறித்திறுதிபெய்தல்
நறியபாறபிரையிடைச்சொனகரநீர்த்துளியீராறும
அறைமுழைமோதல்பாறைதிரைசிறறின்மொழியாறுமே. (௧௦)

இறைசிவன்கடனவேந்தன்கையிறையிருப்பிறைசிறந்தோன்
சிறுமைபுள்ளிறகுதங்கலசென்னிகூனிறைபட்டாறே
உறையுளென்பதுநாறோமுறுதியேநன்மைகல்வி
பொறைமலைதறுகல்பாரமபொறைசுமைகருப்பம்பூமி. (௧௧)

இறும்புதாமரையினபூவேமலைகுறுங்காடுமேறகும்
இறும்பூதுதகைமைவெறபோடதிசயங்குழைதூறென்றும்
கறங்கலேசுழலலோசைகதிரென்பதிரவிசோதி
பறமபுயாமலைமுலைபபேர்பாயமாவேகுதிரைவேங்கை. (௧௨)

கூறறென்பதியமனசொல்லாங்கோமானேமூததோன்பனதி
நீறறநாறுதேறுனறறபோநனவென்பதகலந்தேறறம
ஊற்றென்பதூன்றுகோலுமுறவிடமிருபேரோதும்
நோறறலேபொறைதவப்போறுனங்கென்பதுண்மைதேமல். (௧௩)

கறபமேபிரமன்வாழநாளகறபகதருசுவாக்கம்
பொற்பென்பதழகிறேடுபொலிவுமொப்பனையுமாகும
பற்பமேபதுமந்தூளாமபழங்கணேதுன்பமோசை
உறகைதாரகைதீககொள்ளியுண்டிதான்புசித்தல்சோறே. (௧௪)

முறறல்காழ்கோடணமூப்புமுடிவுடன்வலிததலுறபோ
கெற்றியேறுதலினபேருகெடும்படையுறுப்புமாகும்
கொற்றமேவன்மைவெற்றிகோவரசியன்மூப்பேரே
எற்றுதல்புடைததலோடேயெறிதலுமிருபேராமே. (௧௫)

அறுகென்பசிங்கமோர்புல்யாளியுமாகுமுப்பேர்
வறிதென்பதருகலேசற்றறியாமைபயனில்வார்த்தை
மறலியேமயக்கங்கூற்றுமறலிகண்மறதியினம்

பொறியென்பது—தோணி, செல்வம், இலக்குமி, எந்திரம், அறிவு, அடையாளம், எழுதது, ஐம்பொறி, தேமல். கூ.
வெறி—அச்சம், கலக்கம், வெறியாட்டு, வட்டம, வாசனை, பேய், ஆடு, கள், வியாதி. கூ.

உறை—பொருள், மருந்து, வாழ்நாள், உணவு, வெண்கலம், காரம், ஆயுதவுறை, ஓரிலக்கக்குறிப்பு, பாலிடுபிரை, ஓரிடைச்சொல், சுகரம், நீர்த்துளி. கஉ.
அறை—மலைமுழை, மோதல், பாறை, இரை, சிறறில், சொல். சு.

இறை—சிவன், கடன், அரசன், கையிறை, குடியிறை, உயர்ந்தோன், அற்பம், பறவையினிறகு, தஙகல், தலைமை, கூன், வீட்டிறப்பு. கஉ.
உறையுள்—நாடு, ஊர். உ. உறுதி—நன்மை, கல்வி. உ.
பொறை—மலை, தாஙகல், பாரம், பொறுமை, சுமை, கருப்பம, பூமி.

இறும்பு—தாமரைப்பூ, மலை, குறுஙகாடு. ந.
இரும்பூது—பெருமை, மலை, அதிசயம், தளிர, சிறுதூது. ரு.
கறஙகல்—சுழலல், ஒலி. உ. கதிர—சூரியன, ஒளி. உ.
பறம்பு—மலை, முலை. உ. பாயமா—குதிரை, புலி. உ.

கூறறு—யமன், சொல. உ. கோமான—மூததோன், பன்றி. உ.
நாற்றம்—மணத்தல், தோன்றல. உ. நனவு—அகலம, தெளிவு. உ.
ஊற்று—ஊன்றுகோல, நீரூறறு. உ. தோறறல—பொறுத்தல், தவஞ்செய்தல். உ. நுணஙகு—நுண்மை, தேமல. உ.

கறபம்—பிரமன்வாழ்நாள், கறபகவிருக்ஷம், தேவலோகம. ந.
பொற்பு—அழகு, பொலிவு, அலஙகாரம. ந. பறபம்-தாமரை, துகள்.
பழஙகண—துன்பம், ஒலி. உ. உறகை-விண்மீன், கடைக்கொள்ளி.
உண்டி—உண்ணல், சோறு. உ.

முற்றல்—வயிரஙகொள்ளல், மூப்பு, முறறுபபெறுதல், வளைத்தல். ச.
நெற்றி—நெற்றி, படையுறுப்பு. உ.
கொற்றம்—வலிமை, வெற்றி, அரசியல. ந.
எற்றுதல்—அடித்தல், எறிதல். உ.

அறுகு—சிங்கம், ஒருபுல், யாளி. ந.
வறிது—குறைதல், அற்பம், அறியாமை, பயனில்சொல். ச.
மறலி—மயக்கம், யமன். உ. மறலி—கள், மறதி, இழிவு. ந.

விறலென்பவலிவென்றிப்பேர்விழைந்தோனேநண்பன்வேட்டோன
னொறிலென்பவிரைவிரேறுநடக்கமுமிருபேராமே
நெறிவழிநீதியென்பநிருமித்தல்படைப்பாராய்தல்
பறைபறைவசனத்தோடுபறக்கும்புள்ளிறகுமப்பேர். (௧௭)

றகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௨௧௨.

# னகரவெதுகை.

மனவுநன்மணிசங்கக்காம்வரைமலையிறைவேய்மட்டாம
தனிதமியொப்பின்மைப்பேர்சாந்தமேகமையுஞ்சாந்தம
முனைபகைநுனிவெறுப்பாமுனைவேயங்குரமேபின்னை
பினமிருங்கிளையமைச்சாமெழில்வண்ணமிளமைக்கும்பேர். (௧)

ஆனகம்படகத்தின்பேராகுந்துந்துபியுமப்பேர்
மானமேயளவிலச்சைவிமானமேபெருமைகுற்றம்
பானலேபழனநெய்தல்பாங்கரேயிடம்பக்கப்பேர்
கானலேமயக்கமொப்பாம்வருடமேமழையுமாண்டும். (௨)

தானமேமதநீராட்டிதருகொடைசுவர்க்கநாற்பேர்
பீனமேபருமைபாசிபேடென்பபேடியூரே
நானமேபூசும்பூச்சுநானமுங்குளிக்குநீரும்
வானமாகாயமென்பமழையுலர்மரமுமாமே. (௩)

வானிமேற்கட்டிசேனைவண்டுகிற்கொடிமுப்பேரே
ஆனியுத்தராடமூலஞ்சேதமோர்மாதமென்ப
ஏனையேயொழிபுமற்றையெனுமிடைச்சொற்குமப்பேர்
ஆனியம்பொழுதுநாளாமனந்தையோர்சத்திபூமி. (௪)

முன்னலேநினைவுநெஞ்சாமுன்னஞ்சிக்கிரியோடெண்ணம்
கன்னல்சர்க்கரைகரும்புகரகநாழிகைவட்டிற்பேர்
மன்னனுத்தரட்டாதிப்பேர்மன்னவன்றனுமாகும்
இன்னரநீர்ப்புள்யாழாங்கிடக்கைபூதலம்பாயற்பேர். (௫)

பின்னையேபின்றைதங்கைபெரியமாற்குரியதேவி
கொன்பயனின்மைகாலங்கூடியபெருமையச்சம்
பொன்னென்பவனப்பிரும்புபூமகள்வியாழனாற்பேர்

விறலென்பது—வலிமை, வெற்றி. உ. விழைந்தோன்—சிநேகன், கணவன். உ. நொறில்—விரைவு, நடக்கம். உ. நெறி—வழி, நீதி.
நிருமித்தல்—சிருட்டித்தல், ஆராய்தல். உ.
பறை—வாச்சியம், சொல், பறவையினிறகு. ௩.

---

# ணகரவெதுகை.

---

மணவென்பது—மணிப்பொது, சங்கு, அக்குமணி. ௩.
வணை—மலை, கையிறை, மூங்கில், அளவு. ௪. தணி—தனிமை, ஒப்பின்மை. உ. சாந்தம்—பொறுமை, சந்தனம். உ.
முனை-பகை, நுனி, வெறுப்பு. ௩. முளை-மூங்கில், அங்குரம், மகன். ௩.
இனம்—சுற்றம், மந்திரி. உ. எழில்—அழகு, இளமை. உ.

ஆனகம்—படகம், துந்துபி. உ. மானம்-அளவு, வெட்கம், விமானம், பெருமை, குற்றம். ரு.
பானல்—வயல், நெய்தல். உ. பாங்கர்—இடம், பக்கம். உ.
மானல்—மயக்கம், ஒப்பு. உ. வருடம்—மழை, ஆண்டு. உ.

தானம்—யானைமதம், நீராடல், கொடுத்தல், தேவலோகம். ௪.
பீனம்—பருமை, பாசி. உ. பேடு—பேடி, ஊர். உ.
நானம்—பூசும்பூச்சு, கஸ்தூரி, குளிக்குநீர். ௩.
வானம்—ஆகாயம், மழை, உலர்ந்தமரம். ௩.

வாணி—மேற்கட்டி, சேனை, துகிற்கொடி. ௩.
ஆனி-உத்தராடநக்ஷத்திரம், மூலநக்ஷத்திரம், கேடு, ஆனிமாசம். ௪
ஏனை—ஒழிபு, மற்றையென்னுமிடைச்சொல். உ.
ஆனியம்—காலம், நாள். உ. அனந்தை—ஒருசத்தி, பூமி. உ.

முன்னல்—நினைவு, நெஞ்சு. உ. முன்னம்—சிக்கிரிமரம், எண்ணம்
கன்னல்—சருக்கரை, கரும்பு, கரகம், நாழிகை, நாழிகைவட்டில்
மன்னன்—உத்தரட்டாதிநக்ஷத்திரம், அரசன். உ. கின்னரம்—நீர்வாழ்பறவை, வீணை. உ. கிடக்கை—பூமி, மக்கட்படுக்கை. உ.

பின்னை—பின்பு, தங்கை, இலக்குமி. ௩.
தொன்—பயனின்மை, காலம், பெருமை, அச்சம். ௪.
பொன்—அழகு, இரும்பு, இலக்குமி, வியாழன். ௪.
[illegible]

வன்னியேபிரமசாரிவளர்கினிசமிசெந்தீயாம்
சென்னிகமபாணன்சோழன்சிருனியஞ்செம்பாகும்
கன்னிபெண்ணழிவிலாமைகட்டிளமைக்கும்பேரே
தென்னிசைவனபுததாழைதெறகொடுகெறபுமாமே. (௭)

குன்றுவேதண்டயாகுங்குறைவொடுசதயமுப்போ
அனறிலோபுள்ளுமூலநாளெனவாமிரண்டே
மனறமேவெளியினுமம்வாசமம்பலமுமபபேர்
மனறலேபரிமளபபேர்மருவுகல்யாணமும்பேர். (௮)

தனமுலைபொன்னுன்கன்றுசநதமுத்தனமைம்பேராம
தனவுந்ததிரைமையரபேர்கலிங்கஞ்சாதப்புள்ளாடை
கலைசெதிவொலியாமெனபகவரியேசவரிமேதி
பனுவலேகிளவிநூலாமபடடபலைபூப்புறமேதோட்டம். (௯)

அனநதனேசிவன்மால்சேடனலாயுதனருகனைநதே
அனந்தமேமுடிவிலாமையாடகமவின்முப்பேரே
அனங்கயேயிருவாட்சிபபேராகுமலலிகைககுமப்போ
தனஞ்சயன்பாரததனேசெநதழலொருகாறறுமாமே. (௧௦)

சானகிசீதைமூங்கிறனுவென்பதுடல்வில்லறபம்
சானுவேமலைமுழந்தாணமலைப்பக்கநதானுமாகும்
சோனையேயோணநாளும்விடாமழைசொரிதலும்போ
கானலேமலைச்சார்சோலைகடறகரைச்சோலைபேயததோ. (௧௧)

வானெனபவிசும்புமேகமழையொடுபெருமைநாற்பேர்
தானையேசேனையாடைபடைக்கலந்தானுமாகும்
கானந்தேரிசையேபேதைகாடுதற்பாடியைம்பேர்
ஏனலேசெந்தினைப்போதினைப்புனமென்றுமாமே. (௧௨)

முனியென்பதியானைக்கன்றுமுனிவன்வில்லகததிநாற்போ
துனியென்பபுலவிசீட்டந்துன்பநோயாறுகோபம்
பனியென்பநடுக்கந்துன்பம்பயங்குளிர்மமைம்பேரே
சினையென்பமுட்டைபீளைமரக்கொம்புஞ்செப்புமப்பேர். (௧௩)

மானேசாரங்கமாவின்பொதுவொடுமகரராசி
கானேநன்மணங்காடென்பகல்லியூர்க்குருவியானை
ஏறுதிமஞ்சிகன்மந்திரியுந்தந்திரியுமென்ப
மீனேசித்திரைநாள்வான்மீன்மயிலைபுமெனுமப்பேர். (௧௪)

வன்னியென்பது—பிரமசாரி, கிளி, வன்னிமரம், நெருப்பு. ச.
சென்னி—தலை, பாணன், சோழன். ௩.
சிருள்—ஈயம்,செம்பு.உ. கன்னி-பெண்,அழிவின்மை,கட்டிளமை.
தென்—இசை, அழகு, தென்னமரம், தெற்கு, கற்பு. ரு.

குன்று—மலை, குறைதல், சதயநக்ஷத்திரம். ௩.
அன்றில்—ஒருபறவை, மூலநக்ஷத்திரம். உ.
மன்றம்—வெளி, வாசனை, சபை. ௩.
மன்றல்—மிக்கவாசனை, விவாகம். உ.

தனம்—முலை,பொன்,பசுவின்கன்று,சந்தனம்,[அழகு]பசுமுதலிய மூப்பொருள். ரு.
கனவு—சித்திரை, மயக்கம். உ. கலிங்கம்—வானம்பாடி,சீலை. உ.
கனை—நெருக்கம், ஓசை. உ. கவரி—சாமரம், எருமை. உ.
பனுவல்—சொல், நூல். உ. படப்பை—ஊர்ப்புறம்,தோட்டம்.உ.

அனந்தன்—சிவன், திருமால், சேடன், பலபத்திரன், அருகன். ரு.
அனந்தம்—அளவின்மை, பொன், ஆகாயம். ௩.
அனங்கம்—இருவாட்சி, மல்லிகை. உ.
தனஞ்சயன்—அருச்சுனன், நெருப்பு, தசவாயுக்களுளொன்று. ௩.

சானகி—சீதை, மூங்கில். உ. தனு—உடம்பு, வில், அறபம். ௩.
சானு—மலை, முழந்தாள், மலைச்சாரல். ௩.
சோனை—திருவோணநக்ஷத்திரம், விடாமழை. உ.
கானல்—மலைச்சாரலிற்சோலை, கடற்கரையிற்சோலை, பேயத்தேர்.

வான்—ஆகாயம், மேகம், மழை, பெருமை. ச.
தானை—சேனை, வஸ்திரம், ஆயுதப்பொது. ௩.
கானம்—தேர், இராகம், அறிவிலி, காடு, வானம்பாடி. ரு.
ஏனல்—செந்தினை, தினைப்புனம். உ.

முனி—* யானைக்கன்று, முனிவன், வில், அகத்தி. ச.
துனி—புலவிநீட்டம், துன்பம், வியாதி, நதி, கோபம். ரு.
பனி—நடுக்கம், துன்பம், அச்சம், குளிர்ச்சி. பனி. ரு.
சினை—முட்டை, கருப்பம், மரக்கொம்பு. ௩.

மான்—மான், விலங்கின்பொது, மகரராசி. ௩.
கான்—வாசனை, காடு. உ. கல்வி—ஊர்க்குருவி, ஆமை. உ.
ஏனாதி—நாவிதன், மந்திரி, படைத்தலைவன். ௩.
மீன்—சித்திரைநக்ஷத்திரம், நக்ஷத்திரம், மீன். ௩.

---

* கயமுனி = யானைக்கன்று.

ஞானமேயறிவுகல்விகல்லததுவநூன்முப்பேர்.
பானமேமரக்கலத்தோடெழிஞார்திவிகரபிரண்டாம்
ஏனமோவலக்குடைப்பேரோறுமியுமறமுமப்போ
மேனிபேயவடிவமென்பதிறந்தையும்விளம்பலாமே. (கரு)

ஞானமென்பது—அறிவு, வித்தை, ஞானநூல். ௩.
பானம்—மரக்கலம், வாகனவிகற்பம். ௨.
ஏனம்—ஓலைக்குடை,பன்றி,பாவம். ௩. மேனி—உருவம்,நிறம். ௨.

அன்னேயேமுனபிறந்தாடோழிதாயாகுமென்ப
அன்னமோதிமமேசோருமாகாரமுடனேயடுண்டி
தன்மையேயியல்பிரேதன்மையிடமுஞ்சாற்றும
பன்னலேநெருக்கம்வார்த்தைபருத்தியினபேருமாமே. (கசு)

அன்னே-முனபிறந்தாள, தோழி, தாய. ௩. அன்னம்-அனனப்புள், சோறு. ௨. ஆகாரம-உடம்பு,நெய,உணவு. ௩. தன்மை—அழகு, குணம்,தன்மையிடம். ௩. பன்னல்-நெருக்கம், சொல், பருத்தி. ௩.

வனமேநீர்மிகுதிகாடுவளர்சோலைதுளசியிமம
மனுவேமந்திரமோர்நூலாமண்ணேபேயிளமைமூடன்
புனேயென்பதழகிறேபொலிவுமொப்பனையுமாகும்
மனேயென்பமனைவிவீடாம்வதுவையேமணக்கல்யாணம. (கஎ)

வனம்—நீர், மிகுதி, காடு, சோலை, துளசி, சுடுகாடு. ௬.
மனு—மந்திரம், ஒருதருமநூல். ௨. மண்ணே—பேய, இளமை, அறிவிலான். ௩. புனே—அழகு, பொலிவு, அலங்காரம். ௩.
மனே—இல்லாள், வீடு. ௨. வதுவை—வாசனை, விவாகம். ௨.

அன்வினையொடுபெயர்க்கும்விகுதிசாரியையுமாகும்
மன்னிடுங்கனைத்தலென்பதிருளோசையிருபேர்வைக்கும்
இன்னனவொருசொற்பல்பேர்க்கியற்கவிமுந்நூற்றென்பான்
சொன்னவன்குணபத்திரன்றாள்சூடுமண்டலவன்றானே. (கஅ)

அன்—ஒருவினைவிகுதி, ஒருபெயர்விகுதி, ஒருசாரியை. ௩.
கனைத்தல்—இருள், ஒலி. ௨.

னகரவெதுகை முற்றிற்று.

ஆ விருத்தம் - ௩௧௦.

ஒருசொற்பல்பொருட் பெயர்த்தொகுதி முற்றுப்பெற்றது.

உ

கணபதி துணை.

# பன்னிரண்டாவது

## பல்பெயர்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

### காப்பு.

சொல்வகையெழுத்தெண்ணெல்லாந்தொல்லைநாளெல்லையாக
நல்வகையாக்கும்பிண்டிநான்முகனுணுந்தீமை
வெல்வினைதொடங்கச்செய்துவீடருள்வோன்றாள்போற்றிப்
பல்வகைப்பெயர்க்கூட்டத்தினொருபெயர்பகரலுற்றாம்.

இதன்பொருள். தொல்லை நாள் - ஆதிகாலததிலே,—சொல் வகை எழுத்து எண் எல்லாம் - சொல்லப்படும் பாகுபாட்டினையு டைய இலக்கணமும் கணிதமுமாகிய நூல்கள் முழுதையும்,— எல்லை ஆக - வரையறைப்பட,—நல் வகை ஆக்கும் பிண்டி நான் முகன் - செப்பமாக அருளிச்செயத அசோகமரததின் நிழலின் கண்ணே வீற்றிருக்கும் நான்கு முகங்களை யுடையவரும்,—நாளும் தீமை வெல்வினை தொடங்கச்செய்து - நாடோறும் தீங்கை வெல் லுகின்ற சற்கருமங்களை (மனிதர்கள்) தொடங்கும்படி செய்து,— வீடு அருள்வோன் தாள் போற்றி - அவருக்கு முத்தியைக் கொடுத் தருளுபவருமாகிய அருகக்கடவுளது திருவடிகளைத் துதிசெயது,— பல்வகைப் பெயர்க் கூட்டத்தின் ஒரு பெயர் பகரலுற்றாம் - பல் பெயர்க்கூட்டத் தொருபெயர்த தொகுதியை (யாம்) கூறலுற்றாம் என்றவாறு.

# பன்னிரண்டாவது.

கூறியகூறினுலுங்குற்றமொன்றிலையருத்தம்
வேறுளதாயினென்றுவிதித்தலின்விரித்துமுன்னம்
ஊறிலாச்சிறப்புவர்க்கமுரைத்திவட்பொதுவர்க்கத்தில்
ஏறியவூழுஞ்சொல்வாமேகமேவீடுபேறு.

இ - ள். கூறிய கூறினுலும் - முன் சொன்னவற்றைப் பின்னுஞ் சொல்லினும்—வேறு அருத்தம் உளதாயின் - பிறிதுபொருள் உளதாயின்,—குற்றம் ஒன்று இலை என்று - அங்ஙனம் சொன்னதூற் குற்றம் ஒன்றும் இல்லையென்று—விதித்தலின் - அறிஞர் சொல்லுதலால்,—முன்னம் - முன்னே—ஊறு இலாச் சிறப்புவர்க்கம் விரித்து உரைத்து - குற்றம் இல்லாத ஒருசொற்பலபெயர், பலபொருளொருசொல் என்னும் இருவகைச் சிறப்புத் தொகுதிகளை விரித்துக்கூறி,—இவண் - இங்கே—பொதுவர்க்கத்தில் - பல்பெயர்க்கூட்டத் தொருபெயர்த் தொகுதியில்—ஏறிய ஊழும் சொல்வாம் - ஒன்றிரண்டு முதலிய எண்களால் உயர்ந்தமுறையினையும் சொல்வாம். எ - று.

முதற்பத்துத்தொகுதியும் அருகன், சிவன்முதலிய பலசொற்களைத் தனித்தனி எடுத்துக்கொண்டு அவற்றிற்குரிய பரியாயச்சொற்களைக் கூறுதலாலும், பதினொராவது தொகுதி பகவன், பகல் முதலிய சொற்களைத் தனித்தனி எடுத்துக்கொண்டு அவற்றிற்குரிய பலபொருள்களைக் கூறுதலாலும் இவ்விருகூற்றுப்பதினொரு தொகுதியும் சிறப்புத்தொகுதியென்றும், பன்னிரண்டாவது பல்பெயர்க் கூட்டங்களை ஒன்றிரண்டு முதலிய இலக்கமுறைகளால் பொதுவில்வைத்து விளக்குதலால் இது பொதுத்தொகுதி என்றும் சொல்லப்பட்டன.

ஏகம் - முத்தி. (க)

இருமையேயிம்மையோடுமறுமைநல்வினையினோடு
மருவுதீவினைகளென்பமற்றிருவினையினுமம்
இருவகைததோற்றமென்றேயிடுஞ்சராசரங்களென்ப
இருசுடர்மதியமற்றையிரவியென்றியம்பலாமே. (௨)

இருமரபன்னைதந்தையெய்தியவழியாங்கதம்
இருவகைநறுகந்தங்களேற்றதுர்க்கந்தமென்ப
இருவகையறங்களென்பவில்லறந்துறவறங்கள்
இருவகைப்பொருள்கள்கல்வியேற்றசெல்வங்களாமே. (௩)

இருவகைக்கூத்துத்தானேயியன்றதேசிகமேமார்க்கம்
கருதுமுப்பழங்களின்பேர்கதலிமாபலாவென்றுமே
விரைவொடுசெய்தலேசெயவித்தலேயுடம்பாடென்ன
வருமுறைபாவமோடுபுண்ணியவழக்கமாமே. (௪)

மும்மையேயும்மையிம்மையொழிந்திடுமறுமையென்ப
செம்மையாம்வாக்குக்காயநிகழ்மனமுப்பொறிப்பேர்
மும்மையாங்காலப்பேரின்மொழியிறப்பெதிர்நிகழ்ச்சி
மும்மையாஞ்செய்கைபண்ணன்முறைகாத்தல்சிதைத்தலாமே. (௫)

மூன்றிடமென்பதன்மைமுன்னிலைபடர்க்கையாகும்
ஆன்றமூன்றிலங்களபூமியந்தரஞ்சுவர்க்கமென்ப
மூன்றுகுற்றங்கள்காமமுதிர்சினமயக்கந்தானே
மூன்றுசெஞ்சுடரேதிங்கண்முளைதெழுபரிதியங்கி. (௬)

பழித்திடல்புகழ்தன்மெய்ம்மைபயக்குமும்மொழிபேராகும்
கழிப்பில்வேதத்தின்முதனிகாருகபத்தியத்தோ
டழிப்பிலாத்தெக்கிணாக்கினியாகவநீயமென்ப
ஒழிப்பிலாவுயிரிலங்கியுதரம்விந்துசினத்தீ. (௭)

ஏற்றசாத்துவிகத்தோடேயிராசதந்தாமதங்கள்
ஆற்றுமுக்குணங்களாகுமதிற்சாத்துவிகமேஞானம
சாற்றியதவமேமெய்ம்மைசால்புநல்லருளுண்டாதல்
போற்றியவாமைபோலைம்புலனடக்குதலுமாமே. (௮)

தானமேதவமேமெய்ம்மைதருமம்பேணுதலினோடு
ஞானமேகல்விகேள்விநலனிவைதெரிதருமே
ஈனமொன்றில்லார்வைத்தவிராசதகுணங்களென்ப
ஊனமிதுறுவன்முன்னுரைத்திடுமுறைமைதானே. (௯)

உ. இருபிறப்பு—இம்மை, மறுமை.
இருவினை—நல்வினை, தீவினை.
இருவகைத்தோற்றம்—சரம், அசரம்.
இருசுடர்—சந்திரன், சூரியன்.

ஙு. இருமரபு—தாயமரபு, தந்தைமரபு.
இருவகைக்கந்தம்—நற்கந்தம், துர்க்கந்தம்.
இருவகையறம்—இல்லறம், துறவறம்.
இருவகைப்பொருள்—கல்விப்பொருள், செல்வப்பொருள்.

ச. இருவகைக்கூத்து—தேசிகம், மார்க்கம்.
முப்பழம்—வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழம்.
மூவகைப்பாவபுண்ணியவழக்கம்—செய்தல், செய்வித்தல், உடன்படல்.

ரு. முப்பிறப்பு—உம்மை, இம்மை, மறுமை.
முப்பொறி—வாக்கு, காயம், மனம்.
முக்காலம்—இறந்தகாலம், எதிர்காலம், நிகழ்காலம்.
முத்தொழில்—படைத்தல், காத்தல், அழித்தல்.

சா. மூவிடம்—தன்மை, முன்னிலை, படர்க்கை.
மூவுலகம்—பூமி, அந்தரம், சுவர்க்கம்.
முக்குற்றம்—காமம், வெகுளி, மயக்கம்.
முச்சுடர்—சந்திரன், சூரியன், அக்கினி.

எ. மூவகைமொழி—பழித்தல், புகழ்தல், மெய்கூறல்.
மூவகைவேதத்தீ—காருகபத்தியம், தக்கிணாக்கினி, ஆகவநீயம்.
மூவகையுயிர்த்தீ—உதராக்கினி, காமாக்கினி, கோபாக்கினி.

அ. முக்குணம்—சாத்துவிகம், இராசதம், தாமதம். சாத்துவிகச்செயல்—ஞானம், தவம், மெய்ம்மை, மேன்மை, அருளுடைமை, ஐம்புலனடக்கல்.

கூ. இராசதச்செயல்—தானம், தவம், மெய்மை, தருமம்பேணல், ஞானம், கல்வி, கேள்வி.

காமதகிறைபெருங்கடிசாம்புநல்சொம்புழுதி
காமமேசிறிதேகொண்டுறக்கம்பொச்சாப்பு
நாமமாஞ்சலமேவஞ்சகாட்டியவிம்முப்பாலும்
மாமலிவடனேமற்றமெலிவொடுசேமமுமாமே. (௧௦)

பறைவறுதானமூன்றுவகைதமிழுத்தமர்தான்
பெறுமுறைபோம்பிவைத்துப்பேணியபொருளைத்தானே
குறைகிபெபெருகவென்றுகுறையிரத்தடங்கிகேற்கும்
உறுதவர்க்குவக்கதாழ்ந்தேயபகாரஞ்செய்தலாமே. (௧௧)

சிறுப்பில்லார்மாதாசிதடாராதலர்க்குகல்கல்
-ராருறுகொங்கைகல்லாயமதநியதானமென்ப
ஆர்வமேபகழ்கண்ணோட்டமச்சங்கைம்மாறுயர்ஞைக
* காரணமின்னவெல்லாங்கடைபயனதானமாமே. (௧௨)

திரிகடுகஞ்சுக்கோடுசிபபலிதிளகுசெப்பம்
திரிபலைமெனபதானேதிகழ்கடுநெல்லிதான்றி
பரிமனறுசெம்பொன்வெண்பொன்போற்றிய கரும்பொனனொடு
விரவியமேடமேறுசிதுணமேபருக்கன்வீது. (௧௩)

முல்லைபெருந்திஞ்சிநெய்தன்மொழிந்திடுமருதமென்ப
நலலநானிலமென்றேதும்நாற்கதிடம்பர்மக்கள்
சொல்லியவிலங்கனோடுநரகர்சாதுரங்கமென்ப
வெல்லுயால்யானைதேரேவெம்பரிகாலாளாமே. (௧௪)

குறளைபொயகடுஞ்சொல்லோடுகூறியபயனில்லாதகதை
நறுநுதல்கேட்டிமற்றைநால்வகையிழிசொல்லாகும
மறவிலாவிருக்கினோடுவளமிகுமயசுவேசாமம்
அறைதருமதர்வமென்பவாமிவைவேதநான்கே. (௧௫)

அறமொடுபொருளின்பம்வீடானநாற்பொருள்களாகும
உறுபிவைதம்மைக்கேட்டலோததநால்வகைக்கேள்விப்போ
செறிகடம்வெற்புநீரேதிணிமதிலரணநான்காம்
அறிவொடுநிறையேயோர்ப்புக்கடைப்பிடிகுணநான்காமே. (௧௬)

நாணமேமடமேயச்சநாட்டியபயிர்ப்புநான்கும்
மாணிழைமடநல்லார்க்குவைத்தநாற்குணங்களாகும்
பேணியதவமொழுக்கம்பெருங்கொடைகல்விநான்கிற்
பூணுநற்பொருள்களொன்றும்புண்ணியத்தோற்றமாமே. (௧௭)

---

* காரணங்கடப்பாடேழும் என்றும் பாடம்.

௧0. தாமதச்செயல்—பேருண்டி, ஓடுங்கல், சோம்பு, பூரி, கர்மம், நிதிகேடு, நித்திரை, மறதி, தணியாக்கோபம், வஞ்சம்.

௧௧. மூவகைத்தானம்—உத்தமதானம், மத்திமதானம், அதமதானம். உத்தமதானம்-தருமவழியாற் சம்பாதித்துப் பேணிவைத்திருக்கும் பொருளை மனமடங்கி நோற்குந் தவமுடையாரிருக்குமிடத்திற் சென்று பெற்றுக்கொள்க என்று குறையிரந்து மகிழ்ந்து தாழ்ந்து கொடுத்தல்.

௧௨. மத்திமதானம்—அங்கக்குறைவுடையோர்க்கும், பெண்களுக்கும், செவிடர்க்கும், வறியவர்களுக்கும் கொடுத்தல்.
அதமதானம்—அன்பு, புகழ், கண்ணோட்டம், அச்சம், கைம்மாறு, பிறிதுகாரணம் என்னும் இவைபற்றிக் கொடுத்தல்.

௧௩. திரிகடுகம்—சுக்கு, திப்பலி, மிளகு.
திரிபலை—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்.
திரிபுரம்—பொன்மதில், வெள்ளிமதில், இருப்புமதில்.
சூரியனுக்குரியமூவகைவீதி—மேடவீதி, இடபவீதி, மிதுனவீதி. [மேடவீதி - இடபம், சிங்கம், மிதுனம், கர்க்கடகம். இடபவீதி - மீனம், மேடம், கன்னி, துலாம். மிதுனவீதி - தனு, மகரம், கும்பம், விருச்சிகம்.]

௧௪. நால்வகைநிலம்—முல்லை, குறிஞ்சி, நெய்தல், மருதம்.
நாற்கதி—தேவர், மனுடர், விலங்கு, நரகர்.
நால்வகையங்கம்—யானை, தேர், குதிரை, காலாள்.

௧௫. நால்வகையிழிசொல்—குறளை, பொய், கடுஞ்சொல், பயனில்சொல்.
நால்வகைவேதம்—இருக்கு, யசுர், சாமம், அதர்வம்.

௧௬. நால்வகைப்பொருள்—அறம், பொருள், இன்பம், வீடு.
நால்வகைக்கேள்வி—இந்நான்கினையுமுணர்த்தும் நூல்களைக் கேட்டல். நால்வகையரண்—காடு, மலை, நீர், மதில்.
ஆடவர்க்குரியநால்வகைக்குணம்-அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி.

௧௭. பெண்களுக்குரியநால்வகைக்குணம்—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு. நால்வகைப்புண்ணியத்தோற்றம்—தவம், ஒழுக்கம், கொடை, கல்வி இவற்றை உடையராய்ப்பிறத்தல்.

சொல்லியசாதருபங்கிளிச்சிறைதலங்குகின்ற
நல்லவாடகமேசாம்பூநதமிவைநால்வகைப்பொன்
மெல்லியகொடிப்பூக்கோட்டில்விளங்குபூநீர்ப்பூவேறு
புல்லியபுதற்பூவென்னப்பொருந்துநால்வகையிற்பூவாம். (கஅ)

நறைபடவுண்பதின்பக்குவபருகனுன்காம்
எதிதலேகுததல்வெட்டலெய்தனுன்கூறுபாடாம்
முறைபடுசாமம்பேதமுமாகியதானந்தண்டம
நெறிபடுமுபாயநான்குநிருபர்தம்முறைமையாமே. (கசு)

தவமதாங்குடற்போர்வைக்குட்டொடர்புறுமுட்டைதனில்
நவையறுநிலத்தில்வேர்வினல்லுயிர்த்தோற்றநான்காம
கவியொடுகமகன்வாதிகாசிலாவாக்கியெனப
புவியின்மேனால்வகைத்தாம்புலமையரியல்புதானே. (உ0)

தீட்டியவாசிரேனுமதுரஞ்சித்திரம்வித்தாரப்
பாட்டிவையாருமெச்சப்பாடுவோன்கவியென்றுரும
நாட்டியவரும்பொருட்களசெம்பொருணடையவாகக
காட்டியேவிவகரிப்போன்கமகனெனறறையலாமே. (உக)

ஏதுவுமேற்கோளுந்தர்னெடுத்துடன்காட்டியாங்கே
வாதினிற்பிறன்கோளெல்லாமறுப்பவன்வாதியெனப
ஓதியவறமபொருட்களுறுதிடுமின்பமவீடு
கோதின்றிக்கேட்கவேட்கக்கூறுவோன்வாக்கியாமே. (உஉ)

கொடுத்திடும்பொருளின்மற்றுக்கூறியவினத்திற்கோட்டி
அடுத்திடுமெப்போதப்போதசைவினறியாருமெச்ச
எடுத்தியல்பாகப்பாடுமெவனவனாசுசொல்வான்
வடிப்பிளவனையவொண்கண்மடமொழிவல்லிநல்லாய். (உங)

பொருளினிற்பொலிவுஞ்சொல்லிற்பொருந்தியபொலிவுமறைத்
தருதொடைதொடைவிகற்புந்தாந்துறைதந்தமிர்தமுற
உருவகமுதலாவைத்தேயோதியவலங்காரத்தோ
டுருளறவோசைதோன்றியிருந்ததுமதுரமாமே. (உச)

சொற்றிடுமோலைமாற்றேசழிகுளமேகபாதம்
சுற்றமில்சக்கரத்தின்கூடெழுகூற்றிருக்கை
கத்திமேடிமயக்குக்காட்டும்பாவின்புணர்ப்போ
டொற்றெழுத்தியாவுந்தீர்த்தவொருபொருட்பாட்டினோடும். (உரு)

பல்பெயர்க்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

௧௯. நால்வகைப்பொன்—சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம். நால்வகைப்பூ—கொடிப்பூ, கோட்டுப்பூ, நீர்ப்பூ, புதற்பூ.

௧௯. நால்வகையுணவு—உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன.
நால்வகையூறுபாடு—எறிதல், குத்தல், வெட்டல், எய்தல்.
நால்வகையுபாயம்—சாமம், பேதம், தானம், தண்டம்

௨0. நால்வகையுயிர்த்தோற்றம்—கருப்பையிற்றோன்றுவது, முட்டையிற்றோன்றுவது, வித்துவேர்முதலியவைகளை மேற்பிளந்து தோன்றுவது, வேர்வையிற்றோன்றுவது.
நால்வகைப்புலவர்—கவி, கமகன், வாதி, வாக்கி.

௨௧. கவியாவான்—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் யாவரும் வியக்கும்படி பாடுவோன.
கமகனாவான்—அரும்பொருட்களைச் செம்பொருணடையினவாக்காட்டி விவகரிப்போன்.

௨௨. வாதியாவான—ஏதுவும் மேற்கோளும் எடுத்துக்காட்டிவாதித்துப் பிறன்கொள்கையை மறுப்பவன்.
வாக்கியாவான்—அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப்பொருளையும் யாரும் விரும்பிக்கேட்குமாறு குற்றமறக் கூறுவோன்.

௨௩. ஆசுகவி—சபையிலே ஒருவனுற கொடுக்கப்பட்ட பொருள், பாட்டு அடி முதலியன அமையும்படி விரைந்து பாடவல்லோன்.

௨௪. மதுரகவி—பொருட்சிறப்பும் சொற்சிறப்பும் தொடையும் தொடைவகைகளும் நெருங்கி, உருவகமுதலிய அலங்காரங்களும் இசையுந் தோன்றும்படி பாடவல்லோன்.

௨௫. சித்திரகவி—மாலைமாற்று, சுழிகுளம், ஏகபாதம், சக்கரவகை, எழுகூற்றிருக்கை, பாதமயக்கு, பாவின்புணர்ப்பு, ஒற்றெழுத்தில்லாப்பாட்டு, ஒருபொருட்பாட்டு,

சித்திரப்பாவேமற்றவிசித்திரப்பாவினுவோ
டுதாங்குற்றமில்லாவோரெழுத்தினத்திற்பாட்டே
வைத்திடுங்காதைதன்னைமறைப்பதுகரந்துறைப்பாத்
தைத்தகோமூத்திரிகூடசதுர்த்தமென்றிசைத்தபாட்டு. (உசு)

சருப்பதோபத்திரங்கள்சார்ந்திடுமெழுத்தினோடு
வருக்கமும்வடநூல்வைத்துவருமுதாரணமுநோக்கி
விரித்திடவிசைத்துவைத்தமிறைக்கவிப் * பாட்டுமற்றும
தெரித்ததுபாடவல்லோன்சித்திரகவியென்றுமே. (உஎ)

தெரித்தமும்மணியின்கோவைசெப்புபன்மணியின்மாலை
வருத்தந்தீர்மடலையூர்தன்மரதொடுகலிவெண்பாவே
உருத்தபாசண்டமறமுமுறுமியலிசையேகூத்து
விரித்துறப்பாடவல்லோன்வித்தாரகவியென்றுமே. (உஅ)

வரிசிலையியற்றுவோர்க்குவகுத்தநால்வகையேநிற்றல்
பரவுபைசாசமற்றும்பகர்ந்தவாலீடத்தோடு
பெருகியமண்டலந்தான்பிரத்தியாலீடமாகும்
ஒருகானின்றொருகாறன்னைமுடக்கல்பைசாசமென்ப. (உகூ)

வலப்பதமண்டலித்துவாமபாதந்தான்முந்து
நிலைப்பெயரேயாலீடநின்றமண்டலத்தினுமம்
இலக்கணத்தோடேகூடவிருகாலுமண்டலித்தல்
வலப்பதமுந்திப்பிற்கான்மண்டலம்பிரத்தியாலீடம். (௩0)

பாலனேகுமரன்மன்னன்பருமுதிர்கிழவன்சாவு
நோவுந்தன்பேரெழுத்துக்குறித்ததுமுதலாக்கொளக
ஏதுமுன்னெழுத்துமூன்றுமின்பம்பின்னிரண்டுந்தீதாம்
சாலுமூவகைச்சீர்தானேசாற்றியகவிதைக்கின்பம். (௩௧)

அகரமேயாதியாகவைந்துகுற்றெழுத்துந்தானே
புகல்வல்லூறாந்தைகாக்கைபோர்க்கோழியொடுமயிலாய்
தொகுமுண்டிபோக்குவேந்துதுயில்சாவுதொழில்களாகும்
பகருமைந்தெழுத்துள்யாதுபற்றினுமதுவேமுன்னாம். (௩௨)

பிற்பக்கமாகில்வேறுபேதிக்கும்யாதோவென்னில்
அற்புதவுண்டிசாவேயறிதுயிலரசுபோக்குப்
பொற்பறுமரணந்தூக்கமில்லாதபொழுதையோர்ந்து
பற்பலசெய்யுட்டானேபகர்ந்திடின்மிகுந்தநன்மை. (௩௩)

* மிறைக்கவி - சித்திரப்பா.

உசு. சித்திரப்பா, விசித்திரப்பா, வினவுத்தரம், ஓரெழுத்துப்பாட்டு, ஓரினப்பாட்டு, காதைகரப்பு, கரந்துறைப்பாட்டு, கோமூத்திரி, கூடசதுர்த்தம்,

உஎ. சருப்பதோபத்திரம் என்பவைகளும்; எழுத்தும், எழுத்தின் வர்க்கமும், உதாரணமும் நோக்கிப்பாடும்படி வடநூலுள்ளே வைத்த மிறைக்கவிகளும்; பிறவும் பாடவல்லோன் சித்திரகவி.

உஅ. வித்தாரகவி—மும்மணிக்கோவை, பன்மணிமாலை, மடலூர்தல், மறம், கலிவெண்பா, பாசண்டதுறை, இயல் இசை நாடகம் என்பனவற்றை விரித்துப் பாடவல்லோன்.

உகூ. வில்வீரர் நிற்கும் நால்வகைநிலை—பைசாசம், ஆலீடம், மண்டலம், பிரதத்தியாலீடம். பைசாசமாவது—ஒருகாலை ஊன்றி ஒருகாலை முடக்கிநிற்றல்.

௩0. ஆலீடமாவது—வலக்காலை வளைத்து இடக்காலை முன்வைத்து நிற்றல். மண்டலமாவது—இருகாலையும் மண்டலித்துநிற்றல். பிரத்தியாலீடமாவது-வலக்காலை முன்வைத்து இடக்காலை மண்டலித்துநிற்றல்.

௩க. ஐவகைத்தானப்பொருத்தம்—பாலன், குமரன், அரசன், கிழவன், மரணம். தானப்பொருத்தம் பார்க்கும்போது நெட்டெழுத்துக்களை அவ்வவற்றிற் கினமாயுள்ள குற்றெழுத்திலடக்கி ஐந்தெழுத்தாகக் கொண்டு, பாட்டுடைத்தலைவன் பெயரின் முதலெழுத்தைப் பாலன்றானமாகவைத்தெண்ணுக. எண்ணும்போது எடுத்துக்கொண்ட முதற்சீரின் முதலாம் எழுத்து முதன் மூன்று தானத்துளொன்றாய் வரின் நன்றாகும், பின்னிரண்டுதானத்தில் வருமாயின் தீதாகும். நற்கணமாகிய மூவகைச்சீரே எவ்வகைப்பட்ட பாக்களுக்கும் முதற்சீராகக்கொண்டு பாடல்வேண்டும்.

௩உ. பஞ்சபட்சி—வல்லூறு, ஆந்தை, காகம், கோழி, மயில். இவற்றை முறையே அகரம் முதலிய ஐந்து குற்றெழுத்துக்களும் உணர்த்திநிற்கும். உண்டி, போக்கு, அரசு, துயில், மரணம் என்பன இவற்றின் தொழில்களாகும்.

௩௩. இப்பட்சிகளும் தொழில்களும் அபரபக்கத்திலே மயில், கோழி, காகம், ஆந்தை, வல்லூறு எனவும் உண்டி, மரணம், துயில், அரசு, போக்கு எனவும் பேதமாகக் கொள்ளப்படும். தன் பெயர்ப்பட்சி மரணம் துயில் இல்லாதபொழுதிற் செய்யுள் செய்தல் நன்மை.

சுவையின்மீனளிநாற்றத்திற்றும்பியேபரிசத்தன்னில்
நவையிலாவசுணந்தானேநல்லிசைதனிற்பதங்கம்
உவகையாமொளியைவேட்டேயுயிரினையிழக்குமைந்தாம்
இவையெலாமுடையோர்தம்பாலாருயிரிழந்திடாதார். (௧௪

கோலியவைந்திணைப்போகுறிஞ்சியேசெறிந்தமுல்லை
பாலையேநெய்தலோடுபரவியமருதமாமே
ஏலந்தக்கோலமற்றையிலவங்கத்தொடுசாதிக்காய
சாலுங்கர்ப்பூரமைந்துஞ்சாற்றியபஞ்சவாசம. (௧௫

சந்தனமகிலேஞெமிதகரங்குங்குமமேகோட்டம
இந்தவைந்தெனறுசொல்லுமெய்தியவிரைகளின்போ
உந்துசந்தனங்கர்ப்பூரமுடனெரிகாசுசெந்தேன்
அந்தவேலங்க * ளென்பவகிறகூட்டோரைந்துதாமே. (௧௬

தடுக்குமந்திரிபுரோகிதன்செழிற்றூதனொற்றன
எடுத்துவந்திருந்தசேனைக்கிறைவனைக்குழுவென்றாகும்
பண்டுதொழிலோர்நிமித்தம்பார்ப்பவராயுளவேதா
அடுத்தநட்பாளராயாப்பாரைவகையுறுதிச்சுற்றம். (௧௭

அரசனேயபாத்தியாயனன்னையே † யையனமூத்தோன
குரவரோரைவரெனறுகூறினர்வேறுநூலோர
ஒருவனேயொருதிமற்றுமுறைதிடம்பலரேயொன்று
விரவியபலவெனறைந்துமேவியவைம்பாலமே. (௧௮

பஞ்சரீகத்திதியேவாரம்பகாந்தாளயோகத்தோடு
துஞ்சாதகரணமெனபஞ்சுழகொலைகளவுபொய்யே
அஞ்சாதகள்ளுருந்தலார்குருநிந்தையெனப
பஞ்சார்மெலலடிநல்லாயகேள்பஞ்சபாதகத்தின்பேரே. (௧௯

மயிற்றூவியிலவின்பஞ்சமற்றைச்செம்பஞ்சவெண்பஞ்
சயிர்ப்பிலாவனனத்தூவிபாம்பஞ்சசயனத்தின்பேர்
வியக்குமைம்பால்வகைப்பேர்மேவியமுடியேகொண்டை
குயிற்றியகுழல்பனிச்சைகோலவார்சுருளுங்கூறும். (௨0

டல்லுமேமயூரமறனைவானரம்வல்லியம்மே
சொல்லியசரமேயென்பதுரகதகதிகளைந்தகம்
பல்லிறுக்கடித்தனக்கல்பருகலேவிழுங்கன்மற்றும்
மெல்லவேசுவைத்தலாகும்வினைவிலைந்துணைவுதாமே. (௨௧

* வெல்லங்கள் என்றும்பாடம். † அடிகளே என்றும்பாடம்

௧௪. ஐவகைப்புலனுகர்வாலுயிரிழப்பன — மீன் சுவையினாலும், வண்டு நாற்றத்தினாலும், தும்பி பரிசத்தினாலும், அசுணமா இசையினாலும், விட்டில் ஒளியினாலும் உயிரிழக்கும்.

௧௫. ஐந்திணை—குறிஞ்சி, முல்லை, பாலை, நெய்தல், மருதம்.
பஞ்சவாசம்—ஏலம், தக்கோலம், இலவங்கம், சாதிக்காய், கர்ப்பூரம்.

௧௬. ஐவகைவிரை—சந்தனம், அகில், தகரம, குங்குமப்பூ, கோட்டம்.
ஐவகையகிற்கூட்டு—சந்தனம், கர்ப்பூரம், எரிகாசு, தேன், ஏலம்.

௧௭. அரசனைம்பெருங்குழு—மந்திரி, புரோகிதன், தூதன், ஒற்றன், சேனாபதி.
அவனைம்பெருஞ்சுற்றம்—படைத்தொழிலாளர். நிமித்தம்பார்ப்பவர், ஆயுள்வேதியர், நட்பாளர், அந்தணர்.

௧௮. ஐவகைக்குரவர்—அரசன், உபாத்தியாயன், தாய், தந்தை, தமையன்.
ஐம்பால்—ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால். பலவின்பால்.

௧௯. பஞ்சாங்கம்—திதி, வாரம், நக்ஷத்திரம், யோகம், கரணம்.
பஞ்சபாதகம்--கொலை, களவு, பொய், கள்ளுண்ணல், குருநிந்தை.

௨௦—பஞ்சசயனம்—மயிற்றூவி, இலவின்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, அன்னத்தூவி.
கூந்தலினைம்பால்—முடி, கொண்டை, குழல், பனிச்சை, சுருள்.

௨௧. ஐவகைத்தாளகதி—மல்லகதி, மயூரகதி, வானரகதி, வல்லியகதி, சரகதி.
ஐவகைபுணர்வு—கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல், சுவைத்தல்.

அறியாதான்விஞவல்பின்னையறிவொப்புக்கண்டலோடு
குறியுடனையந்தீர்தல்குறித்தவனறிவுகோடல்
கறையறமெய்யவற்குக்காட்டலிவ்வகைவிஞவாம்
பெறுநிலநீர்தீகாற்றேபெருவிசும்பைந்துபூதம். (௪௨)

தலைவனைம்முகங்களாவசத்தியோசாதம்வாமம்
புலனுறுமகோரமேதற்புருடமீசானமென்ப
குலவுதோறுளைநரம்புகூறிடுகஞ்சங்கண்டம்
இலகுமிவ்வைந்தாலாகுமிசைக்கருவிகளைந்தாமே. (௪௩)

தெய்வமேபிரமம்பூதந்தென்புலத்தோர்மனித்தர்
ஐவகையோரையோம்பலைவகைவேள்வியாமே
உயவகைபாராட்டுந்தாயூட்டுந்தாயமுலைத்தாய்கைத்தாய
செயவகையறிந்தபோற்றுஞ்செவிலித்தாயைவர்தாயர். (௪௪)

இலகியவெண்ணனூசியெழுதலேயிலைக்கிள்ளல
மலர்தொடுத்திடுதலேயாழ்வாசித்தலெழுதிலைத்தாகும
குலவுகொட்டாவிநெட்டைகுறுகுறுப்பேழுச்சிடே
அலமரவொடுங்கிநடுவிழுதன்மெய்யவத்தையைந்தே. (௪௫)

அரக்கிறுலினியதேனேயாயமயிறபீலிநாவி
நெருக்கியகாட்டிலுறறநெடுந்திரவியங்களைந்தாம்
நிரைக்கடறபடுவவுப்புச்செய்யவொண்பவளம்வெண்முத
திரைத்தெழுசங்கோர்க்கோலையிவ்வைந்துமென்னலாமே. (௪௬)

செங்கெல்செவ்விளநீர்மற்றைச்சிறுபயறுடனேவாழை
கன்னலிவ்வைந்துநாட்டிற்கருதியதிரவியப்போ
மின்னுகண்ணாடிபித்தன்வெந்திறன்மந்தியானை
மன்னவனகரியைந்துவருந்திரவியங்களென்ப. (௪௭)

கறியொடுகோட்டமிக்ககாரகிலொடுதக்கோலம்
நறியகுங்குமமைந்தென்பநன்மலைத்திரவியப்பேர்
துறையிலைம்பொறிநுகர்ச்சிசுவையொளியூறேயோசை
அறையுநாற்றங்களென்னுமடைவிவையாகுமன்றே. (௪௮)

அசைவிலாவனசஞ்சூதமசோகமேமுல்லைநீலம்
ஒசியும்வேள்கணைகளாகுமுன்மத்தமதனமோகம்
வசையில்சந்தாபத்தோடுவசீகரணங்கணைப்பேர்
இசையுமற்றிவைகள்செய்தேயிடுமவத்தையுமேற்சொல்வாம். (௪௯)

௪௨. ஐவகைவிறு—அறியான்விறுவல், அறிவொப்புக்காண்டல், ஐயந்தீர்தல், அவனறிவுதான்கோடல், மெய்யவற்குக்காட்டல்.
ஐம்பூதம்—நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம்.

௪௩. ஈசுரனைம்முகம்—சத்தியோசாதம், வாமம், அகோரம், தற்புருடம், ஈசானம்.
ஐவகையிசைக்கருவி—தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, கண்டகருவி.

௪௪. ஐவகைவேள்வி—தேவயாகம, பிரமயாகம், பூதயாகம், பிதிரயாகம, மானுடயாகம.
ஐவகைத்தாயர்—பாராட்டுந்தாய, ஊட்டுந்தாய, முலைத்தாய, கைத்தாய, செவிலித்தாய.

௪௫. ஐவகைத்தொழில்—எண்ணல், எழுதல், இலைகிள்ளல, மலர்தொடுத்தல, யாழ்வாசித்தல்.
மெய்யின ஐவகையவத்தை—கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, மூச்சிடு, நட்டுவிழுதல்.

௪௬. காடுபடுதிரவியம் ஐந்து—அரக்கு, இறால், தேன், மயிற்பீலி, நாவி.
கடல்படுதிரவியம் ஐநது—உப்பு, பவளம், முத்து, சங்கு, ஓர்க்கோலை.

௪௭. நாடுபடுதிரவியம ஐநது—செந்நெல், செவ்விளநீா, சிறுபயறு, வாழை, கரும்பு.
நகர்படுதிரவியம் ஐந்து—கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, யானை, அரசன்.

௪௮. மலைபடுதிரவியம் ஐந்து—மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், குங்குமப்பூ.
ஐம்புலன்—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

௪௯. மன்மதபாணம் ஐந்து—தாமரைப்பூ, மாம்பூ, அசோகம்பூ, முல்லைப்பூ, நீலோற்பலப்பூ. உன்மத்தம், மதனம், மோகம், சந்தாபம், வசீகரணம் என்பன முறையே இவற்றின் பெயர்களாம்.

பெருகுசப்பிரயோகம்பின்பிறந்தவிப்பிரயோகம்மேல்
மருவியசோகமோகமரணமுமுறையேசெய்யும்
பெருகுசப்பிரயோகந்தானபேசசொடுங்கலுமாகும்
விரவுவிப்பிரயோகந்தான்வெய்துயிர்த்திரங்கலாமே. (௫௰)

சோகமேவெந்தபிணொடுதுய்ப்பவைதெவிட்டல்செய்யும்
மோகமேயழுதலோடுமொழிபலபிதற்றலென்ப
வேகமாமரணந்தானேமிகுமயக்கோடியாப்பாம்
பாகடாசொல்லிசலலாயபகருநூலியல்பிதாமே. (௫௧)

ஓதலோதுவித்தலுடனவேட்டல்வேட்பித்திட்டல்
ஈதலேயேற்றலாறுமேற்குமந்தணர்தொழிற்போ
ஓதலேவேட்டலீதலுலகோம்பல்படைபயிற்றல்
மேதகுபோர்செய்திட்டல்வேந்தர்செய்தொழில்களாறே. (௫௨)

படைகுடிகூழமைச்சுப்பாறியநட்பிணொடு
நெடுமதிலரசியற்றுங்கழத்திபவாறுபேதம்
மிடையறவோதல்வேட்டல்வேளாண்மைவாணிகத்தி
லுடனிரைகாத்தலேரையுழலாறும்வசியர்க்காமே. (௫௩)

வசியர்தந்தொழில்களாறுளவகுத்தமுத்தொழில்களான
பசுவோம்பல்பொருளையிட்டல்பயிரிடல்புராணமாதி
நசையறவோதலீதலணுமந்தணர்முன்னோர்க்கு
வசைதவிராறுகூலம்மாமவகைத்தொழில்சூத்திரர்க்காம். (௫௪)

அரிசந்திரனளனேவெற்றியாமுசுகுந்தனோடு
பொருப்புறப்புகழ்தைத்தபுருகுச்சன்புரூரவாவே
விரித்தபூந்தாமககார்த்தவீரியனென்றினோரே
தெரித்தமுன்னெடுத்துவைத்ததிகிரிமன்னவர்களாறே. (௫௫)

ஆறங்கஞ்சிக்ஷைகற்பமாம்வியாகரணமற்றும்
வீறியநிருத்தஞ்சந்தோவிசிதஞ்சோதிடமென்றாகும்
கூறிடுங்கொடியகாமங்குரோதமேயுலோபமோகம்
பாறியமதங்களேமாற்சரியமுட்பகையாறென்ப. (௫௬)

ஒத்தவில்வேல்வாள்யானையுயர்பரிதேரோடாறே
சுத்தமூலங்கான்கூலிதுணைபகைநாடென்றாறே
தித்தித்தல்புளித்தல்கூர்த்தல்சேரவேதுவர்த்தல்காழ்த்தல்
கைத்தலேயறுசுவைக்குக்காட்டியவபிதானங்கள். (௫௭)

௫௦. ஐங்கணையவத்தை—முறையே சப்பிரயோகம், விப்பிரயோ கம், சோகம், மோகம், மரணம் என்பனவாம்.
சப்பிரயோகத்தின்றன்மை—பேச்சும் நினைவும். விப்பிரயோக த்தின்றன்மை—மூச்செறிந்து வருந்துதல்.

௫௧. சோகத்தின்றன்மை—வெதுப்பும் உணவு வெறுத்தலும்.
மோகத்தின்றன்மை—அழுதலும் பிதற்றலும்.
மரணத்தின்றன்மை—மயக்கமும் அயர்ச்சியும்.

௫௨. அந்தணர்க்குரிய அறுதொழில்—ஓதல், ஓதுவித்தல், வேட் டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.
அரசர்க்குரிய அறுதொழில்—ஓதல், வேட்டல், ஈதல், உலகோம் பல், படைக்கலம்பயிலல், போர்செய்திட்டல்.

௫௩. அரசர்க்குரிய ஆறங்கம்—படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண்.
வைசியர்க்குரிய அறுதொழில்—ஓதல், வேட்டல், வேளாண்மை, வாணிகம், பசுக்காத்தல், உழவு.

௫௪. சூத்திரர்க்குரிய அறுதொழில்—பசுக்காத்தல், பொருளீட் டல், பயிரிடல், புராணங்களையோதல், ஈதல், அந்தணர்முதலி யோர்க்கு அநுகூலமாகிய தொழில் செய்தல்.

௫௫. அறுசக்கிரவர்த்திகள்—அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புருகுச்சன, புரூரவா, கார்த்தவீரியன்.

௫௬. வேதாங்கம் ஆறு—சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோவிசிதம், சோதிடம்.
ஆறு உட்பகை—காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம்.

௫௭. அறுவகைத்தானை—வில், வேல், வாள், யானை, குதிரை, தேர்.
அறுவகைப்படை—மூலப்படை, காட்டுப்படை, கூலிப்படை, துணைப்படை, பகைப்படை, நாட்டுப்படை.
அறுவகைச்சுவை—தித்தித்தல், புளித்தல், கூர்த்தல், துவர்த்தல், கார்த்தல், கைத்தல். [கூர்த்தல்—உவர்த்தல். கார்த்தல்—உறைத்தல்.]

அரியவுட்சமயமாறேயானசைவத்தூய்மை
பெருகுபாசுபதத்தோடேபிறங்குமாவிரதமற்றும்
கருதியவீடுபேறுகாட்டுகாளாமுகந்தான்
மருவியவாமமிக்கவைரவமென்னலாமே. (௮௮)

அறுபுறச்சமயந்தானேயறையுலோகாயதம்பின்
உறைதருபௌத்தமேயாருகதமீமாஞ்சமோடு
குறிபெறுமாயாவாதங்கூறியபாஞ்சராத்ரம்
நெறிபெறுமிவையேயென்னநிகழ்த்துவர்நூல்வல்லோரே. (௮௯)

செல்வமேவிளைவுமிக்கசெழுவளஞ்செங்கோலுண்மை
ஒல்குநோய்குறும்பிலாமையறநாட்டமைதியாரும
நலமறமறநதானமேலேகாட்டியவறம்பொருட்கள்
ஒல்லுமினபங்களாறுமோங்கரசியலின்பேதம். (௯0)

தந்தமின்வருணைக்காப்பிற்றரும்பொருளாலேபேணல்
அந்துவாதியறைகைதமமுளறநிலையறமென்றாகும்
முந்திகலறுத்தல்செஞ்சோற்றுதவியில்லோர்ச்செகுத்தல
வந்தவாநிரையைமீட்டன்மறநிலையறமென்றாமே. (௯௧)

நெறிவழிநின்றுதத்தநிலையினூழுழந்துழந்து
பெறுபொருளறநிலைக்குப்பேசியமுறைமையாகும்
செறுநர்தம்பொருளுமற்றதெண்டத்திற்பொருளுஞ்சூதின்
மீறுகியபொருளுமம்மறநிலைப்பொருளினபேரே. (௯௨)

கூறுமோர்பருவநல்லகுலமொத்ததாகத்திவேட்
டாதியவில்லிருந்தலறநிலையின்பமாகும்
ஏறுதான்றழுவல்வில்லாலிலக்கமெய்திடுதலெல்லாம்
மாறுடைநெறியிற்கூட்டமறநிலையின்பமாமே. (௯௩)

வரையொடுதொழிலேவித்தைவாணிகமுழவேசிற்பம்
உரைசெயும்போகபூமியொழிவினிலாதிகாலம்
விரைசெறிபிண்டிவேந்தன்விதித்தலினஃதேயம்ம
கருமபூமியென்னும்பேர்கண்டதொன்றுண்டுநாளின். (௯௪)

விதியுளிபதினாறுண்டுமேவியபன்னீராண்டுப்
பதியொடுமெலிவிதெய்வப்பத்துப்பூத்தருவும்வேண்டும்
புதியபோகங்கொடுப்பப்புணர்ந்தாம்பிரியாராகி
மதியொடுமேறவுமென்னவாழ்வதுபோகபூமி. (௯௫)

௫௮. அறுவகையகச்சமயம்—சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வாமம், வைரவம்.

௫௯. அறுவகைப்புறச்சமயம்—உலோகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாஞ்சம், மாயாவாதம், பாஞ்சராத்திரம்.

௬௦. நாட்டிற்குரிய அறுவகைச்சிறப்பு—செல்வம், விளைவு, பல்வளம், செங்கோன்மை, நோயின்மை, குறும்பின்மை.

அறுவகையரசியல்—அறநிலையறம், மறநிலையறம், அறநிலைப்பொருள், மறநிலைப்பொருள், அறநிலையின்பம், மறநிலையின்பம்.

௬௧. அறநிலையறம்—நான்குவருணத்தாரும் தத்தம் வருணாச்சிரமங்களிற் பிறழாது தங்களைக்காக்குங் காவலின்பொருட்டுக்கொடுக்கும் பொருள்கொண்டு அவரைப்பாதுகாத்தல்.

மறநிலையறம்—பகைத்திறந்தெறுதலும், செஞ்சோற்றுதவியில்லோரைச் செகுத்தலும், நிரைமீட்டலுமாம்.

௬௨. அறநிலைப்பொருள்—நீதிவழிநின்று தத்தம் நிலையினால் முயன்று பெறுபொருள்.

மறநிலைப்பொருள்—பகைஞர்பொருளும், தண்டத்தில் வந்தபொருளும், சூதில்வென்ற பொருளுமாம்.

௬௩. அறநிலையின்பம்—ஒத்தபருவமும் ஒத்தகுலமுமுடைய கன்னிகையை அக்கினிமுன்பாக விவாகஞ்செய்து இல்லிலிருந்தநுபவிக்குமின்பம்.

மறநிலையின்பம்—ஏறுதழுவலும், வில்லால் இலக்கமெய்தலும் முதலியவற்றாற் கன்னிகையை விவாகஞ்செய்தநுபவிக்குமின்பம்.

௬௪. கருமபூமிக்குரிய அறுவகைத்தொழில்—வரைவு, தொழில், வித்தை, வாணிகம், உழவு, சிற்பம்.

௬௫. போகபூமியாவது—பதினாறுவயசுடைய நாயகனும் பன்னிரண்டு வயசுடைய நாயகியும் பத்துக்கற்பகங்களும் வேண்டிய புதியபோகங்களைக் கொடுப்பப்பெற்றுப் புணர்ந்தின்பமுறவிருந்துப் பிரியாது வாழும் பூமி.

வருமாதிபரிவஞ்சம்பார்மதிதநல்லரிவஞ்சம்பைம்
பொருளாரேமதவஞ்சம்மேற்புகழ்பெறுமேவஞ்சம்
ஒருதேவகுருவத்தோடேயுத்தரகுருவமென்ன
வருபோகபூமியாறுவகைப்படுமியல்பதாமே. (௬௬)

வருகலபிராமிமற்றைமகேச்வரியொடுகௌமாரி
மருவீர்வைஷ்ணவிவராகிமாகேந்திரியொடுசாமுண்டி
இருமையேழ்திருக்கள்பேராமிரதமேயுதிரமென்பு
பரவுதோலிறைச்சிமூளைபற்றுசுக்கிலந்தாதேழே. (௬௭)

அறமொடுபொருளேயின்பமன்பொடுபுகழ்மதிப்பு
மறுமையென்றேழுஞ்செங்கோன்மன்னவர்பேறேயாகும்
அறிவுளதேவர்மக்களறிவின்மீன்விலங்குசெந்து
பறவைதாவரங்களென்பபகருமேழ்பிறப்பின்பேரே. (௬௮)

ஊர்வனபதினொன்றாகுமொன்பான்மானுடர்தம்பேதம்
நீரினில்விலங்குபுள்ளுப்பப்பததாநெடியதேவர்
சாருமீரேழ்நாலைந்தேதாவரயோனிபேதம்
ஆறுமெண்பானன்கோடேயமைத்ததாமுயிரங்கள். (௬௯)

இவர்தருநாவலோடேயிறலியேகுசைகிரவுஞ்சம்
புவிபுகழிலவுதெங்குபுட்கரந்தீவேழின்பேர்
உவர்கரும்பின்சாறோடேயொண்மதுநெய்சிறந்த
நவமதாந்தயிர்பாலப்புநாட்டியகடலேழின்பேர். (௭0)

நவமாம்பூலோகமற்றுநாட்டியபுவலோகந்தான்
சுவலோகமகலோகம்மேசொற்றிடுஞ்சனலோகம்மே
தவலோகமதனினோடுசத்தியலோகமின்ன
உவமானமில்லாமேலேழுலகெனுமறிவனூலே. (௭௧)

அதலமேவிதலமற்றுமடைவானசுதலத்தோடும்
இதமுறுதராதலம்மேரசாதலமகாதலந்தான்
புதியபாதலத்தினோடுபோற்றுங்கீழேழுலோகம்
உதவிபவுலகநூலீரேழெனுமுலகுதாமே. (௭௨)

பெருகியகளிற்றின்வட்டம்பெருமணல்வட்டம்பொங்கும்
எரிபரல்வட்டமற்றுமெறியரிபடையின்வட்டம்
பொருவறவிரண்டுமோழ்கப்போர்த்திடும்புகையின்வட்டம்
இருள்வட்டம்பெருங்கீழ்வட்டமென்பவேழ்நிரயவட்டம். (௭௩)

சுசு. அறுவகைப்போகபூமி—ஆதியரிவஞ்சம், நல்லரிவஞ்சம், ஏம தவஞ்சம், ஏமவஞ்சம், தேவகுருவம், உத்தரகுருவம்.

சுஎ. எழுவகைமாதர்கள்—பிராமி, மகேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, மாகேந்திரி, மாகாளி.

எழுவகைத்தாது—இரதம், உதிரம், எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம்.

சுஅ. மன்னவர்க்குரிய எழுவகைப்பேறு—அறம், பொருள், இன்பம், அன்பு, புகழ், மதிப்பு, மறுமை.

எழுவகைப்பிறப்பு—தேவர், மனிதர், நீர்வாழ்வன, விலங்கு, ஊர்வன, பறவை, தாவரம்.

சுகூ. எழுவகைப்பிறப்பில் எண்பத்துநான்குநூறாயிரயோனிபேதம்—ஊர்வன பதினொருநூறாயிரயோனிபேதம, மனிதர் ஒன்பது நூறாயிரயோனிபேதம், நீர்வாழ்வன பத்துநூறாயிரயோனிபேதம், விலங்கு பத்துநூறாயிரயோனிபேதம், பறவை பத்துநூறாயிரயோனிபேதம், தேவர் பதினான்குநூறாயிரயோனிபேதம், தாவரம் இருபது நூறாயிரயோனிபேதம்.

எ0. ஏழுதீவு—நாவலந்தீவு, இறலித்தீவு, குசைத்தீவு, கிரவுஞ்சத்தீவு, இலவந்தீவு, தெங்கந்தீவு, புட்கரதீவு.

ஏழுகடல்—உப்புக்கடல்,கருப்பஞ்சாற்றுக்கடல்,மதுக்கடல்,நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், சுத்தநீர்க்கடல்.

எக. ஏழுமேலுலகம்—பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம்.

எஉ. ஏழுகீழுலகம்—அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதலம்.

எங. ஏழுகிரயவட்டம்—களிற்றுவட்டம், மணல்வட்டம், எரிபரல்வட்டம், அரியடைவட்டம், புகைவட்டம், இருள்வட்டம், பெருந்தீழ்வட்டம்.

குழைவுறுகூடசாலமிரௌரவங்கும்பிபாகம்
விழுபூதியள்ளல்செந்துவிதித்தமாபூதியாமே
வழிகங்கையமுனையேநன்மதைசரஸ்வதிகாவேரி
விழுமியகுமரிகோதாவரியெழுநதியின்பேரே. (௭௪)

புலிபுகழ்கும்பயோனிபுலத்தியனங்கிராவே
கவுதமன்வசிட்டன்மறைகாசிபனொடுமார்க்கண்டன்
இவரெழுமுனிவர்விட்டிரெட்டியரேனங்கள்வர்
அவமழைநால்வாயகிள்ளையாமிவைகாடேழ்குற்றம். (௭௫)

பொழியுமாவர்த்தமெங்கும்போர்த்தபுட்கலஞ்சங்காரம்
கழியுமாசவனமேநீர்க்காரியேருதிசொறகாரி
மொழிசிலாவருடமென்பமுகில்களோரேழினமம
அழிவுகாலத்திறமேனரியடாவனபடர்வானே. (௭௬)

களிற்றயிராவதஞ்சீர்காட்டிபுண்டரீகந்தானற
குளித்தவாமனம்பொன்றேடைக்குமுதமஞ்சனமவெம்போரை
விளைத்திடும்புட்பதந்தமேவியசார்வபௌமம
பிளிறுசுப்பிரதீகந்தானபெருத்தவெண்டிசையானைபோ. (௭௭)

மன்னியவிமயத்தோடுமந்தரங்கைலைவிந்தம்
கொனவளர்நிடதமேமகூடமேநீலவெறபுத
தன்னியகந்தமாதனத்தொடுசூழ்வெற்பெட்டாம
இன்னவையுலகநூலினியற்கையேயென்றுகாண்மின். (௭௮)

மன்னுவாசுகியனந்தன்மருவியதக்கன்சங்கன்
பன்னியகுளிகனொடுபதுமன்மாபதுமன்மறைக்
கொன்னெயிறழல்விழிக்கார்க்கோடகனென்றவெட்டும்
முன்னியகடவுட்பாம்பின்மொழியபிதானமாமே. (௭௯)

திண்டிறன்மகவானங்கிசெறியமனிருதியோடு
கொண்டிடும்வருணன்வாயுக்குபேரனீசானனென்ப
எண்டிசையுலோகபாலரிவர்பேர்கீட்டிசைதொட்டெண்ணும்
கண்டகீழ்பால்வடக்குக்கதிரொடுதிங்கட்காமே. (௮௦)

கொடிபுகைசியஞ்சிறிக்குரைத்துவள்ளொன்றுஞாளி
இடபமேகழுதையானையேகுவாகத்திக்கம்
படிநீர்தீவளியாகாயம்பரிதியேயிரவுதிங்கள்
அடல்புனையியமானன்மற்றட்டமூர்த்தங்களாமே. (௮௧)

௭௪. ஏழுநரகம்—கூடசாலம், இரௌரவம், கும்பிபாகம், பூதி, அள்ளல், செந்து, மகாபூதி.

ஏழுநதி—கங்கை யமுனை, நருமதை, சரசுவதி, காவேரி, குமரி, கோதாவரி.

௭௫. ஏழுமுனிவர்—அகத்தியன், புலத்தியன், அங்கிரா, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன்.

நாட்டில்வரும் ஏழுகுற்றம்—விட்டில், தொட்டியர், பன்றி, கள்வர், அவமழை, யானை, கிளி.

௭௬. ஏழுமுகில்—ஆவர்த்தம், புட்கலம், சங்காரம், ஆசவனம், நீர்க்காரி, சொற்காரி, சிலாவருடம்.

௭௭. எட்டுத்திசையானை—அயிராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம்.

௭௮. எட்டுமலை—இமயம், மந்தரம், கைலை, விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம்.

௭௯. எட்டுநாகம்—வாசுகி, அனந்தன், தக்கன, சங்கன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடன்.

௮௦. எட்டுத்திக்குப்பாலகர்—இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன். இவர்சார்திசைகள் முறையே கிழக்கு முதலாக எண்ணப்படும்.

சூரியசந்திரர் சார்திசைகள்—முறையே கிழக்கும் வடக்குமாம்.

௮௧. எட்டுத்திக்குக்குறி—கொடி, புகை, சிங்கம், நாய், இடபம், கழுதை, யானை, காகம்.

அட்டமூர்த்தம்—நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா.

மன்னியவணிமாமற்றைமகிமாவேகரிமாவோடு
பின்னுறுலகிமாபிராத்திபெறும்பிராகாமியங்கள்
முன்னுறுமீசத்துவம்பின்முற்றியவசித்துவந்தான்
உன்னியநூல்களோதுமோரிருநான்குசித்தி. (௮௨)

இயமமேநியமமுந்தியேற்றவாசனத்தினோடு
நயனுறுபிராணாயாமநாட்டியபிரத்தியாகாரம்
சயமுறுதியானத்தோடுதாரணைசமாதியெட்டும்
வியனுறும்யோகமென்றுவிதித்தனர்மதித்தநூலோர். (௮௩)

அறமையப்படாமைமற்றையவாவின்மையுவர்ப்பொன்றின்மை
நெறிகெழுமயக்கமின்மைநின்றவப்பழியைநீக்கல்
உறுதியினிறுத்தல்பேரன்புடைமையேயறம்விளக்கல்
இறைவனதறத்துட்கூறுமெட்டுறுப்பிவைகளாமே. (௮௪)

கடையிலாஞானத்தோடுகாட்சிவீரியமேயின்பம்
மிடையுறுநாமமின்மைவிதித்தகோத்திரங்களின்மை
அடைவிலாவாயுவின்மையந்தராயங்களின்மை
உடையவனிறைவனென்னவுரைக்குமாருகதநூலே. (௮௫)

இன்னவையருகநூலினிசைக்குமெண்குணங்கண்மற்றும்
தன்வயந்தூயதேகந்தருமியல்புணர்வுமேலாப்
பன்னுமுற்றுணர்வினோடுபாசங்களியல்பினீங்கல்
முன்னுபேரருளேமற்றைமுடிவிலாவாற்றல்பின்னும். (௮௬)

வரம்பிலாவின்பமென்றேவாய்த்திடுங்குணங்களெட்டும்
தரம்பெறுசைவநூலிற்சாற்றியதொகையாமென்ப
திருந்துமிக்குணங்கடானேசேர்ந்தவனியாவனென்னிற்
பொருந்தியவுலகமெல்லாம்புரந்திடுங்கடவுளாமே. (௮௭)

மன்னியவறிவுகாட்சிமறைத்தல்வேதநீயத்தோடு
துன்னுமோகநீயமாயுத்தொடர்நாமகோத்திரங்கள்
முன்னுறுமந்தராயமொழிந்தவெண்குற்றமாகும்
இன்னவைதீர்ந்தோன்யாவன்யாவர்க்குமிறைவனாமே. (௮௮)

பெறுவதுதெரிதலீட்டல்பேணிமற்றவைபகுத்தல்
இறுவதஞ்சாமையென்றுமிடனறிந்தொழுகல்வந்தே
உறுபெருந்தனிமையாற்றலுடன்முனிவிலனாதல்
மறுவறுபொழுதிற்கூடல்வசியர்தங்குணங்களெட்டே. (௮௯)

அ௨. எட்டுச்சித்தி--அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.

அ௩. எட்டுயோகாங்கம்— இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதி.

அ௪. எட்டுத்தருமாங்கம்- அரவையப்பாமை, விருப்பின்மை, வெறுப்பின்மை, மயக்கமின்மை, பழிமையநீக்கல், அழிந்தோரை நிலைநிறுத்தல், அறுசமயத்தவர்க்கன்பு, அறம்விளக்கல்.

அ௫. அருகனுக்குரிய எண்குணம் —கடையிலாவறிவு, கடையிலாக்காட்சி, கடையிலாவீரியம், கடையிலாவின்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அந்தராயங்களின்மை.

அ௬. சிவனுக்குரிய எண்குணம் -தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, வரம்பிலாற்றலுடைமை.

அ௭. வரம்பிலின்பமுடைமை.

அ௮. அருகனுக்காகாவென விலக்கப்பட்ட எட்டுக்குற்றம்--ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயு, நாமம், கோத்திரம், அந்தராயம்.

அ௯. வைசியர்க்குரிய எண்வகைக்குணம்—உழுவதுதெரிதல், மாட்டல், கொடுத்தல், இறுவதஞ்சாமை, இடனறிந்தொழுகல், தனிமையாறறல், முனிவிலனாதல், பொழுதொடுபுணர்தல்.

குணகாரம்பரியச்சந்தான்குறித்தபாற்கரமேமூலம்
தணவாமானதமேகண்மஞ்சலிதியேதருதமெட்டும்
கணியார்தங்கணிதந்திபங்கவரிகண்ணுடிதோட்டி
பணர்மீனேமுரசுகும்பம்பொலிகொடிசுபமோரெட்டே. (௯0)

தட்டலேபற்றலோடுதடவலேதீண்டல்குத்தல்
வெட்டலேகட்டலூன்றன்மெய்ப்பரிசங்களெட்டாம்
விட்டில்தன்னரசுநால்வாய்மிகுமழைமிகுகாற்றோடே
நட்டம்வேற்றரசுகிள்ளைநாடுறுங்கேடெட்டென்ப. (௯௧)

பிரமமேபிரசாபத்தியம்பெருகுமாரிடமேதெய்வம்
கருதுகாந்தருவத்தோடேகாட்டியவசுரமற்றும்
பரவியவிராக்கதங்கள்பைசாசமிருநான்கென்ப
மருவியவுலகியற்கைவகுத்திடுமணங்களின்பேர். (௯௨)

நிரைகவர்ந்திடுதல்வெட்சிநிரைமீட்டல்கரந்தையென்ப
வெருவார்மேற்சேறல்வஞ்சிமீட்டெதிருன்றல்காஞ்சி
வருநொச்சிபுரிசைகாத்தல்வளைத்திடலுழிஞையாகும்
பொருவதுதும்பையென்பபோர்வெல்லல்வாகையாமே. (௯௩)

கரணத்திற்றிரள்கள்வாய்ந்தகடைகாப்போர்நகரிமாக்கள்
தருபடைத்தலைவர்மற்றுந்தன்கிளைச்சுற்றம்யானை
புரவியூர்வோரேயென்றும்போற்றுகாவிதியரென்றும்
விரவியவெண்பேராயம்வேந்தருக்கமைத்ததாமே. (௯௪)

குறளொடுசெவிடுமூங்கைகூன்மருள்குருடுமாவே
உறுமுறுப்பில்லாப்பிண்டமோதியவெண்மெய்யெச்சம்
நிறையுநீர்நிலனேதேயுநிகழ்சுடர்மதியேவானம்
பெறுமியமானன்வாயுப்பேசியகணங்களெட்டே. (௯௫)

நிலனொடுநீர்வெண்டிங்கணேரியமானன்வெய்யோன்
உலவுதீவாயுவிண்ணென்றோதியகணங்களெட்டில்
நலமுறுகவிதைமுன்னர்நாட்டியநான்குநன்றாம்
கலகமாம்பின்னர்நான்குகணங்களுங்காணுங்காலே. (௯௬)

கூ0. அட்டகணிதம்—குணகாரம், பரியச்சம், பாற்கரம், மூலம், மானதம், கன்மம், சலிதி, தருதம்.
அட்டமங்கலம்—விளக்கு, கவரி, கண்ணாடி, தோட்டி, இணைக்கயல், முரசு, நிறைகுடம், கொடி.

கூக. எண்வகைமெய்ப்பரிசம்—தட்டல், பற்றல், தடவல், தீண்டல், குத்தல், வெட்டல், கட்டல், ஊன்றல்.
நாட்டில்வரும் எண்வகைக்கேடு—விட்டில், தன்னரசு, யானை, மிகுமழை, மிகுகாற்று, நட்டம், வேற்றரசு, கிளி.

கூஉ. எண்வகைமணம்—பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம்.

கூங. எண்வகைமாலை—வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை. இவை முறையே நிரைகவர்தல், நிரைமீட்டல், பகைமேற்சேரல், எதிரூன்றல், மதில்காத்தல், அரண்வளைத்தல், அதிரப்பொருதல், போர்வெல்லுதல். என்னுமிவற்றிற்குரியனவாம்.

கூச. அரசர்க்குரிய எண்பேராயம்—கருமாதிகாரர், கடைகாப்பாளர், நகரிமாக்கள், படைத்தலைவர், சுற்றத்தார், யானைவீரர், குதிரைவீரர், காவிதியர்.

கூரு. எண்வகை உடற்குறை—குறள், செவிடு, மூங்கை, கூன், மருள், குருடு, மா, உறுப்பிலாப்பிண்டம். [மருள் - ஆணோ பெண்ணோவென்றறியப்படாத உறுப்புமயக்கம். மா - விலங்குறுப்புவிரவப்பெற்றவடிவம். உறுப்பில்பிண்டம் - உறுப்புக்குறைந்த வடிவம்.]

செய்யுளுக்குரிய எண்வகை அசை—நீர்க்கணம், நிலக்கணம், தேயகணம், சூரியகணம், சந்திரகணம், ஆகாயகணம், இயமானகணம், வாயுகணம்.

கூசு. மேற்சொல்லிய எட்டினுள் நிலக்கணம், நீர்க்கணம், சந்திரகணம், இயமானகணம் என்னும் நான்கும் நூலிலே முதற்செய்யுண் முதலில் வருதல் நன்றாம். மற்றைய நான்கும் வருதல் தீதாம்.

கூஎ. நிரை நிரை நிரை நிலக்கணம். நேர் நிரை நிரை நீர்க்கணம். நிரை நேர் நேர் சந்திரகணம். நேர் நேர் நேர் இயமானகணம்.

கூஅ. நேர் நிரை நேர் சூரியகணம். நிரை நேர் நிரை தேயுகணம். நேர் நேர் நிரை வாயகணம். நிரை நிரை நேர் ஆகாயகணம்.

கூகூ. பெரியோர்க்குச்செய்யும் நவபுண்ணியம் — எதிர்கொளல், பணிதல், ஆசனத்திருத்துதல், கால்கழுவல், அருச்சித்தல், தூபங் காட்டல், தீபங்காட்டல், துதித்தல், உணவுகொடுத்தல்.

௪00. நவகண்டம்—வடபால்விதேகம், தென்பால்விதேகம், கீழ் பால்விதேகம், மேல்பால்விதேகம், வடபாலிரேவதம், தென் பாலிரேவதம், வடபாற்பரதம், தென்பாற்பரதம், மத்திமக ண்டம்.

௪0௧. நவதாரணை—நாமதாரணை, மாயாதாரணை, வச்சிரதாரணை, சித்திரதாரணை, சத்ததாரணை, வத்துதாரணை, சதுரங்கதாரணை, செய்யுட்டாரணை, நிறைவு குறைவாகிய வெண்பொருட்டாரணை.

௪0௨. செய்யுளுக்குரிய நட்சத்திரம் ஒன்பதாகப்பிரித்தறிதல்— பாட்டுடைத்தலைவன்மீது பாடப்படும் முதற்பாவின் முதற்சீர்க் குரிய முதலெழுத்திற்கமைந்த நட்சத்திரம் அவனியற்பெயரின் முதலெழுத்திற்கமைந்த நட்சத்திரத்திற்கு அடுத்த நட்சத்திரமா கவும், நான்காம் ஆறும் எட்டாம் ஒன்பதாம் நட்சத்திரங்களாக வும் இருத்தல் நன்று. அவனுடைய நட்சத்திரமாகவும், அதற்கு மூன்றும் ஐந்தாம் ஏழாம் நட்சத்திரங்களாகவும் இருத்தல் தீது. 'இவ்விருபத்தேழு நட்சத்திரங்களும் மும்முறை ஒன்பது ஒன்ப தாகப் பிரித்து அறியப்படும்.

௪0௩. நவதாளம்—சமதாளம், அருமதாளம், அரிதாளம், படிமதா ளம், துருவதாளம், சித்திரதாளம், விடதாளம், சயதாளம், நிவிர்ததாளம்.

௪0௪. நவரத்தினம்—மரகதம், பவளம், நீலம், வச்சிரம், பதுமரா கம், முத்து, கோமேதகம், புருடராகம், வயிடூரியம்.

நல்லசிங்காரம்வீரம்நகைசாந்தங்கருணைகுற்சை
ஒல்லுமற்புதம்பயத்தோடுறுகோபமிரதமொன்பான்
கல்லுலோகம்மண்செங்கல்கண்டசர்க்கரைமெழுக்குச்
சொல்லியமரமேதந்தஞ்சுதைவண்ணந்தொழிற்சிற்பர்க்காம். ()

நெடுமலையாறுநாடூர்நீண்டதார்புரவியானை
கொடிமுரசுடனேதானைகூறியதசாங்கமென்ப
படிபுனைநாவலேமுப்பழநாற்பான்மரமுத்தக்கா
சொடுமாவின்றளிர்பத்தென்பவோதியதுவரின்பேரே. (௧௦௬)

நாமமீனாமைபன்றிநாரசிங்கத்தினோடு
வாமனன்பரசுராமன்வானரர்தொழுமிராமன்
பாமலிவாசுதேவன்பலதேவனுடனேகற்கி
ஆமிவைபத்துந்தானேயரியவதாரமென்ப. (௧௦௭)

வருவிருந்தோம்பலாணைவழிநிற்றலொழுக்கமூக்கம்
சீலஃத்கின்மையென்றுங்கைக்கடனாற்றலன்றே
உரியதாமிறையிறுத்தலொற்றுமைகோடல்போற்றல்
விரவுமண்வினைதொடங்கல்வேளாளர்செய்கைபத்தே. (௧௦௮)

எடவிழ்மகிழ்சுவைக்கவெழிற்பாலைநண்புகூடப்
பாடலநிந்திக்கத்தேம்படிமுல்லைநகைக்கப்புன்னை
ஆடநீள்குராவணைக்கவசோகுதைத்திடவாசந்தி
பாடமாப்பார்க்க * வார்சண்பகநிழல்படத்தளிர்க்கும். (௧௦௯)

பரிதியிந்திரண்டுசீறும்பைநாகக்கோளிரண்டோ
டிருசுடர்வளைந்துசூழும்பரிவேடநெடுகவீண்டுப்
பெருகியவான்மீன்வானிற்பெருந்தூமமெதிர்ந்தவில்லுக்
கருதுமிவ்வெல்லாம்பேசிற்கரந்துறைகோள்களாமே. (௧௧௦)

சாற்றுகாப்புச்செங்கீரைதாலேசப்பாணிமுத்தம்
போற்றுவாரானையேயம்புலிசிற்றில்சிறுபறைப்பின்
எற்றிடுஞ்சிறுதேராமிப்பருவம்பத்தையுமிசைக்கும்
தேற்றுமாண்பிள்ளைப்பாட்டாசிரியஞ்சேர்விருத்தப்பாவே. (௧௧௧)

அரிவையர்க்காகிலீற்றிலறைமூன்றுபருவமாகா
உரியதாங்கழங்கம்மானையூசல்முன்னேழினோடு
வருமூன்றேயாதிமூவேழ்மதிகாருற்றித்தமாதத்
திருபாலாரையுங்கேட்பித்தலினிதைந்தேழாண்டுதானே. (௧௧௨)

---

* பாடவேமராப்பார்க்கச் சண்பக என்றும்பாடம்.

௧0௫. நவரசம்—சிங்காரம், வீரம், நகை, சாந்தம், கருணை, குற்சை அற்புதம், பயம், கோபம். [சிங்காரம்-இன்பம். குற்சை-இழிபு.]
பத்துவகைச்சிற்பத்தொழிலுறுப்பு—கல், உலோகம், மண், செங்கல், கண்டசர்க்கரை, மெழுகு, மரம், தந்தம், சுதை, வண்ணம்.

௧0௬. தசாங்கம்—மலை, யாறு, நாடு, ஊர், மாலை, குதிரை, யானை, கொடி, முரசு, தானை.
பத்துவகைத்துவர்—நாவல், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், ஆல், அரசு, அத்தி, இத்தி, முத்தக்காசு, மாந்தளிர்.

௧0௭. விட்டுணுவின்தசாவதாரம்—மீன், ஆமை, பன்றி, நரசிங்கம், வாமனம், பரசுராமன், தசரதராமன், கண்ணன், பலதேவன், கற்கி.

௧0௮. வேளாளருடைய பத்துவகைச்செய்கை—விருந்தோம்பல், ஆணைவழிநிற்றல், ஒழுக்கம், முயற்சி, மனத்துமாசின்மை, கைக்கடனாற்றல், அரசர்க்கிறைகொடுத்தல், ஒற்றுமைகோடல், சுற்றம்பேணல், மாட்சிமையானவினைகளைத்தொடங்கல்.

௧0௯. பெண்களான்மலரும் பத்துவகைமரம் — மகிழ் பெண்கள் சுவைத்தலாலும், பாலை நண்புசெய்தலாலும், பாதிரி நிந்தித்தலாலும், முல்லை நகைத்தலாலும், புன்னை ஆடுதலாலும், குரா அணைத்தலாலும், அசோகு உதைத்தலாலும், குருக்கத்தி பாடுதலாலும், மா பார்த்தலாலும், சண்பகம் நிழல்படுதலாலும் மலரும்.

௧௧0. கரந்துறைகோள்கள்பத்து—சூரியன், சந்திரன், இராகு, கேது, பரிவேடமிரண்டு, வான்மீன், தூமகேது, வானவில்லிரண்டு.

௧௧௧. ஆண்பிள்ளைக்கவியுறுப்புப்பத்து—காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர். பிள்ளைக்கவி ஆசிரியவிருத்தத்தாலியற்றப்படும்.

௧௧௨. பெண்பிள்ளைக்கவியுறுப்புப்பத்து-ஆண்பிள்ளைக்கவியுறுப்புப்பத்தில் சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்னு மூன்றுறுப்பையு நீக்கி எஞ்சிய ஏழுறுப்போடு கழங்கு, அம்மனை, ஊசல் என்னும் மூன்றுறுப்பையுஞ் சேர்க்கப்பத்தாம். இக்கவிகளை மூன்றாமாசமுதல் இருபத்தோராமாசம்வரை ஒற்றித்த மாசங்களினும், ஐந்தாம் ஏழாம் ஆண்டினும் கேட்பிக்கலாகும்.

அனலுடனசனிசிதமாயுதம்விடமருந்து
புனல்வளிவிடத்தையுந்தான்புசிப்பிக்கும்பசியேதாகம்
நனிமிகுமுனிவருமைநாட்டியபிணியிரண்டே
இனையும்வேதனையீராறுமெய்திடுந்துன்பமென்ப. (௧௧௩)

தந்தியொன்றேதேரொன்றுசாதியாம்புரவிமூன்று
வந்திடும்பதாதியைந்துவகுத்திடும்பத்தியென்ப
உந்துமப்பத்திமூன்றேயுறிற்சேனாமுகமென்றாகும்
முந்துசேனாமுகந்தான்மும்மடிகுல்மமாமே. (௧௧௪)

மருவியகுல்மமூன்றுமடிதானேகணமதாகும்
கருதியகணமேமூன்றுகாட்டியவாகினிப்பேர்
பெருகுவாகினிதான்மூன்றுபிருதனையாகுமென்ப
வருபிருதனைதான்மூன்றுவகுத்திடுஞ்சமூவாகும்மே. (௧௧௫)

பேரியல்சமூவேமூன்றுபிரளயம்பிரளயந்தான்
ஓர்மூன்றேசமுத்திரமாகுமுயர்சமுத்திரமோர்மூன்று
தேர்தருசங்குசங்குமூன்றதேயநீகமென்ப
சோர்விலாவநீகமூன்றேசொல்லுமக்குரோணியாமே. (௧௧௬)

விரவுசாரணரேசித்தர்விஞ்சையர்பசாசர்பூதர்
கருடர்கின்னரரியக்கர்காந்தர்வர்சுரர்தைத்யர்
உரகராகாசவாசருத்தரகுருவோர்யோகர்
கிருதர்கிம்புருடர்விண்மீனிறைகணமூவாறுமே. (௧௧௭)

சீர்மணிபரிதியானைதிருநிலமுலகுதிங்கள்
கார்மலைசொல்லெழுத்துக்கங்கைநீர்கடல்பூத்தேர்பொன்
ஏருறுமிவைமூவாறுமிதிற்பரியாயப்பேரும்
ஆருமங்கலச்சொற்செய்யுளாய்ந்துமுன்வைக்கநன்றாம். (௧௧௮)

பசியதிசயமேயுள்ளல்பயமேகையறவுமூப்புக்
கசிவுநீர்வேட்டல்வேண்டல்கதமதங்கேதத்தோடே
ஒசியுநோய்பிறப்பிறப்போடுவகையேயுறக்கமின்பம்
இசையுமீரொன்பான்குற்றமிவைதீர்ந்தோனிறைவனாமே. (௧௧௯)

மச்சமேகூர்மஞ்சைவம்வைணவம்வராகம்லிங்கம்
பத்மம்வாமனமேகாந்தம்பவிடியமாக்கினேயம்
கற்புளபிரமங்கைவர்த்தம்மேநாரதமார்க்கண்டம்
உற்றபாகவதமேகாருடம்பிரமாண்டந்தொன்னூல். (௧௨௦)

௧௧௩. உயிர்க்குரிய பன்னிருவகைவேதனை — அனல், இடியேறு, குளிர், ஆயுதம், நஞ்சு, மருந்து, நீர், காற்று, பசி, தாகம், முனி வறுமை, பிணி.

௧௧௪. பன்னிருவகைத்தானை—யானை ஒன்று, தேர் ஒன்று, குதிரை மூன்று, பதாதி ஐந்து கொண்டது ஒருபத்தி. பத்திமூன்றுகொண்டது சேனாமுகம். சேனாமுகம் மூன்றுகொண்டது குல்மம்.

௧௧௫. குல்மம் மூன்று கொண்டது கணம். கணம் மூன்றுகொண்டது வாகினி. வாகினி மூன்றுகொண்டது பிருதனை. பிருதனை மூன்று கொண்டது சமூ.

௧௧௬. சமூ மூன்று கொண்டது பிரளயம். பிரளயம் மூன்று கொண்டது சமுத்திரம். சமுத்திரம் மூன்று கொண்டது சங்கு. சங்கு மூன்று கொண்டது அநீகம். அநீகம் மூன்று கொண்டது அக்குரோணி.

௧௧௭. பதினெண்கணங்கள்—சாரணர், சித்தர், விஞ்சையர், பைசாசர், பூதர், கருடர், கின்னரர், இயக்கர், காந்தர்வர், சுரர், தைத்தியர், உரகர், ஆகாசவாசர், போகபூமியர், முனிவர், நிருதர், கிம்புருடர், விண்மீன்.

௧௧௮. பதினெண்வகைமங்கலச்சொல்—சீர், மணி, பரிதி, யானை, திரு, நிலம், உலகு, திங்கள், கார், மலை, சொல், எழுத்து, கங்கை, நீர், கடல், பூ, தேர், பொன். இவையன்றி இவற்றின் பரியாயப் பெயர்களும் செய்யுளில் முன்வைத்தற்குரிய மங்கலச் சொற்களாம்.

௧௧௯. யாக்கைக்குரியபதினெண்வகைக்குற்றம்—பசி, அதிசயம், நினைத்தல், பயம், கையறவு, மூப்பு வியர்த்தல், நீர்வேட்டல், வேண்டல், வெகுளி, மதம், கேதம், நோய், பிறப்பு, இறப்பு, உவகை, உறக்கம், இன்பம்.

௧௨௦. பதினெண்புராணம்—மச்சம், கூர்மம், சைவம், வைஷ்ணவம், வராகம், இலிங்கம், பத்மம், வாமனம், காந்தம், பவிஷ்யம், ஆக்கினேயம், பிரமம், பிரமகைவர்த்தம், நாரதீயம், மாக்கண்டேயம், பாகவதம், காருடம், பிரமாண்டம்.

முடிகுடைகவரிதோட்டிமுரசுசக்கரமேநால்வாய
கொடிமதில்தோரணநீர்க்குடமலர்மாலைசஙகு
கடலொடுமகரமாமைகயலிணையரிமாதீபம்
இடபமாசனமூவேழுமிறைதிருபபொறிகளாமே. (௧௨௧)

இச்சையாறபேடிசெயயுமிலககணமிபபாறகேண்மின
நசசவேபேச்லோடுநலலிசையோாநதுநிறறல்
அசசமொனறிலைர்தாங்கியாண்பெண்ணுமடைவியறறல்
உசசியிறகையைவைததலொருகரநதானேவீசல. (௧௨௨)

விழிகளைவேருச்செயதல்வெம்முலைநலிததுநிறறல்
சுழலவேநோககனககுநாணமுெநதோமெனமுெததல்
கழிநடம்பயிறறல்வேறுகாரணமில்லாககோபம
அழுதிடனடுநடுங்கியாஙகொருபககமபாாததல். (௧௨௩)

இரஙகுதல்வருந்தல்யாருமிரஙகவேபேசிககாட்டல்
குரங்கல்கோதாடல்கூடல்கூவிளிகொண்டுநிறறல்
மருஙகினிறகையைவைததலவாஙகுதல்பாஙகிதன்னைத
திருநதவேநோக்கலேலேலெனறலுஞ்செயகையாமே. (௧௨௪)

உருவகமுவமையோடேயூனறியவடிமடககே
விரிசுடர்நிலைமடககேவேறறுமைவெளிப்படுத்தல்
யுருவியநோககேயுட்கோளவருநதொகைமொழியேமறறைத
தருமிகைமொழியேவாாததைதன்மைவேறருததம்வைபபே. ()

சிறபபதாநிலைசிலேடைமறுததிடுநிலையினவார்ததை
நிறுததுடனிலையிறகூட்டமுவமாரூபகததொடு
வெறுபபிலாமகிழசசிசெயதமிகுநுவலானுவறசி
உறுததியேயிடுநதலைககூடடியரணிதெரிசனஙகள். (௧௨௬)

உரைகெழுபாராட்டோடேயொருஙகியனிலையேயையம்
விரவியநிலைவாழததெனனவிதிததிடுமிருபததெட்டாம
மருவியவலஙகாரததைவரிசையிறபாடவல்லோன்
புரிவுறுமெழுததுஞ்சொல்லும்பொருள்யாப்போடிவையறிநதோன.

இநதநல்லிலக்கணத்திலிசைந்திடுதுறையும்வல்லோன்
நந்தமுததமிழிலோடுநாறகவிபாடவல்லோன்
வந்துநறகுலததுதிததோன்வடிவமோடொழுக்கமுள்ளோன்
அந்தவாறையாண்டேகியாண்டெழுபானீஙகாதோன். (௧௨௮)

௧௨௪. அரசர்க்குரிய இருபத்தொருவகைச்சின்னம்—முடி, குடை, கவரி, தோட்டி, முரசு, சக்கரம், யானை, கொடி, மதில், தோரணம், பூரணகும்பம், மாலை, சங்கு, கடல், மகரம், ஆமை, இணைக்கயல், சிங்கம், தீபம், இடபம், ஆசனம்.

௧௨௨. பேடிக்குரிய இருபத்தைந்துவகையிலக்கணம்—நச்சப்பேசல், நல்லிசையோர்தல், ஆண்பெண்ணுடைமையற்றல், உச்சியிற்கையைவைத்தல், ஒரு கை வீசி நடத்தல்,

௧௨௩. விழிகளைவேருச்செய்தல், முலையைவருத்திநிற்றல், கண்சுழலநோக்குதல், நாணுதல், தொந்தோமென்றுதாளமிடல், நடித்தல், காரணமின்றிக்கோபித்தல், அழுதல், ஒருபக்கம்பார்த்தல்,

௧௨௪. இரங்குதல், வருந்தல், யாவருமிரங்கும்படிபேசுதல், வளைதல், கோதாடல், கூடல், கூவிளிகொள்ளல், மருங்கிற்கையைவைத்தல், அதனை எடுத்தல், பாங்கியைநோக்கல், ஏலேலென்றுபாடல்.

௧௨௫. இருபத்தெட்டுச்செய்யுளலங்காரம் — உருவகம், உவமை, அடிமடக்கு, தீபகம், நிலைமடக்கு, வேற்றுமை, வெளிப்படை, நோக்கு, உட்கோள், தொகைமொழி, மிகைமொழி, சொற்பின்வருநிலை, தன்மை, வேற்றுப்பொருள்வைப்பு,

௧௨௬. சிறப்பு, சிலேடை, மறுத்துமொழிநிலை, உடனிலைக்கூட்டம், உவமரூபகம், மகிழ்ச்சி, நுவலாநுவற்சி, ஒப்புமைக்கூட்டம், நிதர்சனம்,

௧௨௭. புகழ்ச்சி ஒருங்கியனிலை, ஐயம், கலவை, வாழ்த்து என்னும் இவ்வணிகளாம்.

நல்லாசிரியன் இலக்கணம்—இவ்வலங்காரங்களோடு மற்றை எழுத்துச் சொற்பொருள் யாப்பு என்னும் நான்கினையும் அறிந்தவனும்,

௧௨௮. இவ்விலக்கணத்துறைகளில் வல்லவனும், முத்தமிழிலும் நாற்கவிகளிலும் வல்லவனும், உயர்குலத்துதித்தவனும், அழகும் ஆசாரமுமுடையவனும், முப்பதுவயதின்மேற்பட்டு எழுபது வயசுக்குட்பட்டவனும் நல்லாசிரியனும்.

ஒழுக்கடிர்கவிதைதன்னைவசையிலார்கொள்ளுங்காலைக்
சொழிப்பிறோணங்களூட்டிக்கொடிமாடமெடுத்துயர்த்தி
விழுத்தருகோலஞ்செய்துமென்றுகில்விரித்தபின்றைத்
தெழித்திடும்பல்லியந்தான்முகிலெனத்திமிதிமென்ன. (௧௨௯)

அட்டமங்கலங்களேந்தவரிவையர்பலரும்வாழ்த்த
மட்டவிழ்பாளைவேய்ந்தமணிக்குடந்தீபமல்கப்
பட்டபல்லுணமுளைத்தபாலிகைவிதானப்பந்தர்
இட்டமாமனையிற்சான்றோரியல்புளியிரீஇயபின்னை. (௧௩௦)

மன்னுமாசனத்திருத்திவளமலிசவிதைசேட்டுப்
பொன்னொடுதுகிருந்தூசும்பூண்முடிகடகத்தோடும்
இன்னவைபலவுமீந்திட்டேழடிபுலவன்பின்போய்
நின்மெனநிற்றன்மன்னர்நிலமிசைவழக்கதாமே. (௧௩௧)

பாட்டிடைத்தலைவன்றனேபரிசிலீயாதகாலை
மீட்டொருபெரியனூராபேர்வேறுசொல்லியற்றிச்சேர்க்கின்
ஈட்டுசெல்வங்கள்பொன்றியீங்கிவன்றிருவுமாய்ந்து
நாட்டியவவனுக்காகுநவின்றநூல்வழக்கிதாமே. (௧௩௨)

பரிசிலீயாதபாவிபாமாலைசெம்பூச்சூட்டி
வரியரவுறைவன்மீகமாகாளிமுன்றிறன்னில்
ஊரியநீண்மனைப்புறத்திலொள்ளெரிகொளுத்தில்வீயம்
தெரியமோராண்டிலென்றேசெப்பினன்முனிவன்றனே. (௧௩௩)

ஆதுலர்சாலையையமறுசமயத்தோர்க்குண்டி
ஓதுவார்க்குணவுசேலையுறுமேறவிடல்காதோலை
மாதுபோகம்மகப்பால்மகப்பேறுமகவளர்த்தல்
வேதைநோய்மருந்துகொல்லாவிலைகொடுத்துயிர்நோய்தீர்த்தல். ()

கண்ணாடிபிறரிற்காத்தல்கன்னிகாதானங்காவே
வண்ணார்நாவிதரேசுண்ணமடந்தடங்கண்மருந்து
தண்ணீர்பெய்பந்தல்கோலத்தலைக்கெண்ணெய்சிறைச்சோறுடு
பண்ணைவிலங்குணல்கல்பசுவின்வாயுறைகொடுத்தல். (௧௩௫)

அறவையாம்பிணமடக்கலறவைத்தூரியம்வருந்தா
நிறுவியேயிடம்விடாமனிறையதின்பண்டநல்கல்
உறுதியாவுரிஞ்சுகின்றதறியிவையோதுமெண்ணான்
கறநிலையபிதானங்களம்பிகைசெய்யுமாறே. (௧௩௬)

சஉக. புலவர்கவிதையை அரசர் அங்கிகரிக்குமுறைமை—குற்றமில்லாத கவிதையை அரசர்கொள்ளும்போது தோரணங்கள் நாட்டி, கொடியுயர்த்தி, கோலஞ்செய்து, பட்டு விரித்தபின் பலவாச்சியங்களும் முழங்க,

சரு௦. அட்டமங்கலங்களேந்த, பெண்கள் பல்லாண்டு கூற, பூரணகும்பமும் தீபமும் முளைப்பாலிகைகளும் விளங்க, விதானப்பந்தருள்ளே அறிஞர்களை முறைப்படி இருத்தியபின்,

சருக. தனதாசனத்திற்புலவனை இருத்தி, கவிதையைக்கேட்டு, புலவனுக்குப் பொன்முதலியவைகளைக் கொடுத்து, ஏழடிதூரம் அவனுக்குப் பின்போய் வழிவிட்டு, அவன் நிற்க என்றபின் நிற்றல் முறைமையாகும்.

சருஉ. பரிசில்கொடாத உலோபியர்க்குச் செய்யுட் செய்வகை—கவிதை கேட்ட பாட்டுடைத்தலைவன் பரிசில் கொடானாயின், அக்கவிதையினின்றும் அவன்பெயரையும் ஊரையும் எடுத்துவிட்டு, வேறொருவனுடைய ஊரையும் பெயரையும் நாட்டின, பரிசில் கொடாதவனுடைய செல்வமெல்லாம் நீங்கப் பின்னர் நாட்டப்பட்டவனுக்காகும்.

சருரு. பரிசில்கொடாத பாவியினுடைய பாமாலையை எழுதிச் செம்பூச்சூட்டிப் பாம்புப்புற்றிலும், காளிகோயிலிலும், தன்மனைப்புறத்திலும், எரித்தால் அவன் ஒருவருடத்தில் இறப்பான் என்று அகத்தியமுனிவர் கூறினர்.

சருச. முப்பத்திரண்டு அறம்—ஆதுலர்க்குச்சாலை, ஐயம், அறுசமயத்தோர்க்குண்டி, ஓதுவார்க்குணவு, சேலை, ஏறுவிடுத்தல், காதோலை, பெண்போகம், மகப்பால், மகப்பேறு, மகவளர்த்தல், மருந்து, கொல்லாமல்விலைகொடுத்துயிர்நோய்தீர்த்தல்,

சருரு. கண்ணாடி, பிறரிற்காத்தல், கன்னிகாதானம், சோலை, வண்ணார், நாவிதர், சுண்ணம், மடம், தடம், கண்மருந்து, தண்ணீர்ப்பந்தர், தலைக்கெண்ணெய், சிறைச்சோறு, விலங்கிற்குணவு, பசுவுக்கு வாயுறை,

சருசா. அறவைப்பிணமடக்கல், அறவைத்தூரியம், தின்பண்டநல்கல், ஆவுரிஞ்சுதறி.

ற்றறிபுலனொன்றாற்புன்மரமேயோரறிவிற்சீவன்
முற்றுமீரறிவிற்சீவன்முரணந்தேயாதிநாவாற்
செற்றமூவறிவிற்சீவன்சிதலெறும்பாதிமூக்காற்
சொற்றநாலறிவிற்சீவன்றும்பிவண்டாதிகண்ணால். (௧௩௭)

வானவர்மனிதர்கீழ்போய்மாழ்கியநரகரோடு
கானுறைவிலங்குபுள்ளுக்காட்டுநாலறிவினோடே
ஊனமில்செவியுமாங்கேயுறுவினையறிவிற்சீவன்
மானமர்நோக்கினல்லாய்மனமுமொன்றதிகமாமே. (௧௩௮)

காப்புக்குமுன்னெடுக்குங்கடவுடான்மாலேயாகும்
பூப்புனைமலரின்செல்விபுனைபவனாதலானும்
காப்பவனாதலானுங்கதிர்முடிகடகத்தோடு
வாய்ப்பதாமதாணிபூணூல்வரிசையிற்புனைதலானும். (௧௩௯)

அருக்கனூர்திதானேயம்புயம்படைநற்காட்சி
பெருகியஞானசீலம்பெருங்கொடியருளேயென்ப
மருமலர்க்கொன்றையார்க்குவாகனமிடபமாகும்
பரசொடுகெடியசூலம்பினாகவில்படைகளாமே. (௧௪௦)

கரியமால்துவசமூர்திகலுழனென்றுரைக்கற்பாற்றே
[illegible]ரிசிலையாழிசங்குவாள்கதைபடையைந்தாகும்
பிரமனூர்தியன்னம்பெரும்படைபாசமாகும்
அருமறைகொடியேயாகுமந்தணர்தமக்குமாமே. (௧௪௧)

பரிவுளபலதேவற்குப்படைநாஞ்சில்கொடியேபெண்ணை
எருமையேயமன்றனூர்தியெறிபடைபாசந்தண்டாம்
கரியதோர்கூற்றினுக்குக்கடும்படைகணிச்சியாகும்
புரிநரவாகனம்பூம்புட்பகங்குபேரனூர்தி. (௧௪௨)

குறைவிலாத்தனிக்காற்பொற்றேர்கூறியவருக்கனூர்தி
நிறைதருமதியினூர்திநீண்முத்துவிமானமென்ப
அறுமுகனூர்திதானேயானையுமயிலுமென்ப
உறுபடைவேலாமற்றையொண்கொடிகோழியாமே. (௧௪௩)

கரியயிராவதம்பூங்கற்பகக்காவேசோலை
உரியவெம்பரியின்பேரேயுச்சயிச்சிரவமாகும்
மருவுமண்டபஞ்சுதன்மைமாளிகைவசந்தமென்ப
பெருகியவுருமுமற்றைப்பெருங்கொடிபுரந்தரற்காம். (௧௪௪)

௧௩௭. ஓரறிவுயிர்—புல், மரம் முதலியன. இவைமெய்யாற் பரிசத்தை அறியும். ஈரறிவுயிர்—முரள், நந்து முதலியன. இவை பரிசத்தோடு நாவினாற்சுவையையும் அறியும் [முரள்-அட்டை.] மூவறிவுயிர்-கறையான், எறும்பு முதலியன. இவை அவ்விரண்டோடு மூக்கினாற் சுவையையும் அறியும். நாலறிவுயிர்—தும்பி, வண்டு முதலியன. இவை அம்மூன்றனோடு கண்ணால் உருவத்தையும் அறியும்.

௧௩௮. ஐயறிவுயிர்கள்—வானவர், மனிதர், நரகர், விலங்கு, புள் ளு இவர் அந்நான்கனோடு செவியினால் ஒலியையும் அறிவர். இவர்க்கு மனத்தாலறியும் அறிவும் விசேடமாக உண்டு.

௧௩௯. காப்புக்கு முன்னெடுக்கும் கடவுள்—இலக்குமிக்கு நாயகராயிருத்தலாலும், காவற்கடவுளாயிருத்தலாலும், முடிமுதலியன புனைதலாலும் காப்புக்கு முன்னெடுக்கும் கடவுள் விட்டுணுவாகும்.

௧௪௦. அருகன்வாகனம்—தாமரைப்பூ. படை - காட்சி, ஞானம், சீலம். கொடி - அருள்.
சிவன்வாகனம்—இடபம். படை - மழு, சூலம், பினாகவில்.

௧௪௧. விட்டுணுவின்வாகனம்—கருடன். கொடி - கருடன். படை - வில், சக்கரம், சங்கு, வாள், தண்டு என்னும் பஞ்சாயுதங்கள். பிரமன்வாகனம்—அன்னப்பறவை. படை - பாசம். கொடி - வேதம். இது பிராமணருக்குமாம்.

௧௪௨. பலதேவன்படை—கலப்பை. கொடி - பனை.
யமன்வாகனம்—எருமை. படை - பாசம், தண்டு.
காலன்படை—கணிச்சி.
குபேரன் வாகனம்—நரவாகனம், புட்பகவிமானம்.

௧௪௩. சூரியன் ஊர்தி—ஒற்றையாழித்தேர்.
சந்திரன் ஊர்தி—முத்துவிமானம்.
சுப்பிரமணியர் ஊர்தி—யானை, மயில். படை - வேல். கொடி - கோழி.

௧௪௪. இந்திரன் ஊர்தி—ஐராவதயானை. சோலை-கற்பகச்சோலை. குதிரை - உச்சயிச்சிரவம். மண்டபம் - சுதன்மை. மாளிகை - வசந்தம். கொடி - இடிபேறு.

௧௪௫. காளியூர்தி—சிங்கம். கொடி - பேய்.
துர்க்கையின்படை—வாள். ஊர்தி - கலைமான்.
மூதேவியின்வாகனம்-கழுதை. படை-துடைப்பம். கொடி-காகம்.

௧௪௬. சத்தமாதர்களுள்ளே அபிராமிக்கு அன்னமும், மாகேசுவரிக்கு இடபமும், கௌமாரிக்கு மயிலும், வைணவிக்குக் கருடனும், வராகிக்குச் சிங்கமும், மாகேந்திரிக்கு யானையும், மாகாளிக்குப் பேயும் வாகனங்களாகும். இவர்க்கு முறையே வேதமும், பினாகவில்லும், வேலும், சக்கரமும், கலப்பையும், வச்சிரமும், சூலமும் படைகளாம்.

௧௪௭. சேரன்கொடி—வில்லு. மாலை - பனந்தார்.
சோழன்கொடி—புலி. மாலை - ஆத்திமாலை.
பாண்டியன்கொடி—மீன். மாலை - வேப்பந்தார்.
புலவருடையகொடி—பன்றி, யானை.

௧௪௮. அரசுவாவினிலக்கணம்—நான்குகால்களும், கோசமும், துதிக்கையும், வாலுமாகிய ஏழுறுப்பும் நிலத்திலே தோய்ந்து, காலில் வெண்மையான நகமுடையதாய், வால் நாலுகால் உடம்பு துதிக்கை இரண்டு கொம்பு என்றுமிவற்றுற் கொல்லவல்லதாய், ஏழுமுழமுயர்ந்து ஒன்பதுமுழ நீண்டு பத்துமுழச்சுற்றுடையதாய்,

௧௪௯. முற்பாக முயர்ந்து பிற்பாகந் தாழ்ந்து அழகியதாய், தேன் கண்ணினையும் சூழிசார்ந்த மத்தகத்தினையுமுடையதாய், சுளகு போன்ற செவியினையும் மும்மதத்தையு முடையதாயுள்ள யானை அரசர்க்குரிய அரசுவாவாகும்.

௧௫0. அரசர்க்குரிய குதிரையினிலக்கணம்—மகளிர் மனம்போன்ற மனமுடையதாய், வாழைப்பூமடல்போன்ற செவியுடையதாய், நான்கு கால்களும் முன்புறமும் முதுகும் பிடர்த்தலையும முகமும் வெண்மையுடையதாய், எண்பத்திரண்டங்குல உயரமுடையதாயுள்ள குதிரை அரசர்க்குரிய குதிரையாம்.

௧௫௧. நூறாயிரங் கொண்டது அதியுகம். அதியுகம் நூறாயிரங் கொண்டது பிரமம். பிரமம் நூறாயிரங் கொண்டது கோடி. கோடி பத்துக்கொண்டது அர்ப்புதம்.

௧௫௨. கோடி நூறு கொண்டது கணகம். கணகம் பத்துக்கொண்டது கற்பம். கற்பம் பத்துக்கொண்டது நிகற்பம். நிகற்பம் பத்துக்கொண்டது சங்கம். சங்கம் பத்துக்கொண்டது சமுத்திரம்.

உரைத்தவிப்பல்பேர்க்கூட்டத்தொருபெயர்த்தொகுதிதன்னில்
விருத்தமூவைம்பதின்மேன்மிகுதியோரிரண்டுசெய்தான்
திருக்கிளர்குணபத்திரன்றாள்சென்னியிற்சூடிக்கொண்டோன்
றருக்கிளர்பொழில்சூழ்வீரைமன்னன்மண்டலவன்றனே.

## பன்னிரண்டாவது

பல்பெயர்க்கூட்டத்தொருபெயர்த்தொகுதி முற்றிற்று.

